
கணக்கு மாஸ்டர் ஒரு ஏப்ரல் முட்டாள்!
இதை யார் எழுதினது?
இதை யார் எழுதினதுன்னு கண்டு-பிடிச்சு அவனை கிளாசை விட்டு வெளியே அனுப்பப் போறேன்...
யார் எழுதினது?
நான்தான் சார்..!
நான்தான்!
நான்!
நான்!
நான்!
நான்
நான்!


ஏப்ரல் ஃபூல்!
ஸ்டாப்...
ஏப்ரல் ஃபூல்!
மதி...



பம்பாய் :

# ஒரு புதிய ஹீரோ!

ராஜீவ்மேனன்.

அசப்பில் ஹீரோ மாதிரி வெண்ணெய்யாக இருக்கும் ராஜீவ்!

ஹீரோ மாதிரி என்ன, மாதிரி! மணிரத்னம் ரோஜாவில் நடிக்கக் கூப்பிட்டார். இவர்தான் மறுத்து விட்டார். அப்புறம்தான் அரவிந்தசாமி நடித்தார்!

பம்பாய் படத்தின் ஒளிப்பதிவாளரான இவர், தமிழ் சினிமா ரசிகர்களுக்குப் புதுமுகம் என்றாலும் தினசரி டீவி விளம்பரங்கள் மூலம் ஏற்கெனவே அறிமுகமானவர்தான். ("மாமி காப்பி சாப்பிடறீங்களா?" "சரி, ஜெயா.") பல பிரபல விளம்பரங்களின் ஒளிப்பதிவு-கம்-டைரக்டர். அம்மா கல்யாணி மேனன், பிரபல மலையாளப் படப் பாடகி.

விளம்பரப் படங்களை ஒதுக்கி விட்டு இனி சினிமா உலகுக்கே வந்து விடுவாரா, ராஜீவ் மேனன்?

"I don't want to waste my time in making usual



• பம்பாய் படப்பிடிப்பில், ராஜீவ்மேனன், மணிரத்னம்...

> **"ஒளிப்பதிவாளனுக்கு ஒளிப்பதிவு மட்டும் தெரிந்தால் போதுமா? கலையின் பல்வேறு உருவங்கள் பற்றிய ஆரம்ப அறிவு கூட இல்லாதவன் எப்படி ஒரு கலைஞனாக முடியும்?"**

commercial films" என்கிறார்.

ஏன்?

ஆழ்வார்பேட்டையில் அவரது சின்ன ஃபிளாட்டில் (மலையாள வாசனையுடன் ஃபர்னிச்சர்கள், வீணை, தம்புரா, புத்தகங்கள், நிறைய குத்துவிளக்குகள் மற்றும் ஒரு புஷ்டி நாய்) சந்தித்துக் கேட்ட போது,

"கமர்ஷியல் படங்கள் மேல் எனக்கு வெறுப்பு - விரோதம் ஏதுமில்லை. ஆனால் எல்லாப் படங்களும் ஒரே மாதிரி இருக்கின்றன. சினிமா, வியாபாரம் என்பதில் குறை சொல்லவில்லை.... ஆனால் வியாபாரம் மட்டுமே சினிமாவின் நோக்கம் என்பதில்தான் எனக்கு உடன்பாடில்லை. சில வருஷங்களுக்கு முன் பிரதாப்போத்தன் இயக்கிய ஒரு மலையாளப் படத்திற்கு ஒளிப்பதிவு செய்தேன். (சைதன்யம்) 'ஏன் ஒப்புக் கொண்டோம்?' என்றாகி விட்டது. என்னதான் கமர்ஷியல் படம் என்றாலும் 'காம்ப்ரமைஸ்' செய்து கொள்வதற்கு ஒரு அளவில்லையா? அன்று எடுத்த முடிவுதான்... சினிமா பக்கமே வராது இருந்து விட்டேன். கலையைக் கொச்சைப்படுத்துவது மகாபாவம்" என்று சொல்லும் ராஜீவ், முன்னதாக கிரிஷ் கர்நாடின் ஒரு படத்திற்கும் (செலுவி) ஷ்யாம் பெனகலின் சில டாக்குமென்ட்ரிகளுக்கும் கூட ஒளிப்பதிவு செய்திருக்கிறார்.

**ப**ள்ளி நாட்களில் அப்பா இறந்து விட, சம்பாத்தியத்துக்காகக் கல்யாண போட்டோக்கள் எடுக்க ஆரம்பித்து, பின் பத்திரிகைப் படங்கள், இன்டஸ்ட்ரியல் போட்டோக்கள், பின் விளம்பரம் என்று படிப்படியாக வளர்ந்த ராஜீவ், இத்துறைக்கு வந்த



***"உன் பெரிய அண்ணா என்ன படிக்கிறான்?"***

***"பி.ஏ. செகண்ட் இயர்."***

***"சின்ன அண்ணா?"***

***"ஹையர் செகண்டரி, செகண்ட் இயர்."***

***"நீ என்ன படிக்கறே?"***

***"எட்டாவது ஸ்டாண்டர்ட், செகண்ட் இயர்."***

***— வெ. ராஜாராமன்***

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

கதை வெகு சுவாரஸ்யம்.

"பள்ளி நாட்களில் குவிஸ் போட்டிகளில் கலந்து கொள்வதில் எனக்கு ஆர்வம் அதிகம். அதில் பதில் சொல்வதற்காக நிறைய புத்தகங்கள் படிக்க வேண்டியிருந்தது. குறிப்பாக, பெயிண்டிங் சம்பந்தமான நூல்கள். எந்தப் படம், யார் வரைந்தது என்று அறிய படங்களைக் கூர்ந்து நோக்கும் வழக்கம் வந்தது. அது குவிஸ் போட்டி என்கிற எல்லையைத் தாண்டி, பெயிண்டிங்கில் தீவிர ஈடுபாடு ஏற்பட்டு விட, தலைகீழாக நின்றும் எனக்குப் பெயிண்டிங் வரவில்லை. ஆகவே அதன் அடுத்த பரிமாணமான ஸ்டில் போட்டோகிராபியைத் தேர்ந்தெடுத்தேன்."

**பி**ன்னாளில், பிளஸ்-டூ முடித்து, பிலிம் இன்ஸ்டிடியூட்டில் ஒளிப்பதிவு கற்று, ஸ்டெடி-கேம் கேமராவைக் கையாள அமெரிக்கா சென்று கற்று வந்திருக்கிறார்.

"அங்கே எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. அங்குள்ள ஒளிப்பதிவாளர்களுக்கு அமெரிக்கன் லிட்ரேச்சர் பற்றி ஒன்றுமே தெரிந்திருக்கவில்லை. ஒளிப்பதிவாளனுக்கு ஒளிப்பதிவு மட்டும் தெரிந்தால் போதுமா? கலையின் பல்வேறு உருவங்கள் பற்றிய ஆரம்ப அறிவு கூட இல்லாதவன் எப்படி ஒரு கலைஞனாக முடியும்? ஒளிப்பதிவாகட்டும், இசையாகட்டும், வேறு எதுவுமாகட்டும் - இவையெல்லாம் கலையை வெளிப்படுத்தும், இனம் காட்டும் கருவிகளே தவிர, தொழில்நுட்பமே எப்படி கலையாகும்?" என்றெல்லாம் கேட்கும் ராஜீவ் "கலை மூலம் மனிதனின் உணர்ச்சிகளைத் தொட வேண்டும். அதுதான் சினிமாவின் நோக்கமாக இருக்க வேண்டும்" என்கிறார்.

"பேச்சின் மூலம் கொண்டு வர முடியாத உணர்ச்சிகளை என் கேமரா மூலம் கொண்டு வர முயற்சி செய்கிறேன். பாசாங்கு இல்லாமல் - போலித்தனமில்லாமல் அதை வெளிப்படுத்த முடியுமானால் போதும். சிறந்த ஒளிப்பதிவாளர் என்று பெயர் வாங்கி பிரபலமாவதிலெல்லாம் எனக்கு அக்கறை கிடையாது" என்னும் ராஜீவ் சொன்ன ஒரு விஷயம் ரசிக்கும்படி இருந்தது :

"பம்பாய் ரிலீஸான அன்று எக்கச்சக்க டென்ஷனுடன் அபிராமி தியேட்டரில் உலவிக் கொண்டிருந்தேன். டைட்டில் கார்டில் ரகுமான், அரவிந்தசாமி, மணிரத்னம் - இவர்கள் பெயர் வந்த போது பெரும் கைத்தட்டல், விசில். என் பெயர் வந்த போது ரொம்ப அழகான நிசப்தம்! காரணம், யாருக்கும் என்னைத் தெரியாது. எனக்கொன்றும் அதில் வருத்தமில்லை. படம் முடிந்து அத்தனை மக்களும் உணர்ச்சிவசப்பட்டவர்களாக வெளியேறும் போது - அப்படிப்பட்ட உணர்வைத் தந்ததில் என் பங்கும் உழைப்பும் உண்டு என்கிற நிறைவே எனக்குப் போதுமானதாக இருந்தது. எதற்காகப் 'பெயர்' தெரிய வேண்டும்? கலைஞனை விட கலை முக்கியம்!"

**சி**னிமா வேண்டாம் என்று விளம்பரத் துறைக்குப் போனவர் மறுபடி 'பம்பாய்'க்கு எப்படி வந்தார்?

"சினிமா மேல் எனக்கு விரோதமில்லையே? மசாலாக்கள் மேல்தானே! 'பம்பாய்', சமூக அக்கறையுடன் எடுக்கப்பட்டிருக்கும் ஒரு படம். அனாவசியமான விஷயங்கள் இதில் ஏதும் இல்லை. படத்தின் முன் பாதியில் வரும் அரவிந்தசாமி - மனிஷா காதல் காட்சிகள் கூட மிகச் சுருக்கமான ஷாட்களிலேயே சொல்லப்பட்டிருக்கின்றன. வன்முறைச் சம்பவங்களைக் கூட நேரடியாகக் காட்டாமல், கலை சார்ந்து என்னால் தர முடிந்தது; சுதந்திரமாகச் செயல்பட முடிந்தது. என் விஷயங்களில் டைரக்டரிடமிருந்து எந்தக் குறுக்கீடும் இல்லை. அது எனக்குப் பெரிய ஆச்சர்யம். ஏனெனில் மணிரத்னத்தின் முந்தைய படங்களில் தெரிந்த இருட்டு, புகை, லைட்டிங் விஷயங்களைப் பார்த்து விட்டு எனக்குத் தயக்கம் இருந்தது. ஒப்புக் கொள்ள பயமாயிருந்தது. சினிமா என்பது வாழ்க்கையைக் கலையாக்கிக் காட்டுகிற முயற்சி. தனிப்பட்ட எந்த டெக்னீஷியனின் சாமர்த்தியமும் அதில் தெரிவதை விட உணர்ச்சிகள் ஒழுங்காக வெளிப்படுகின்றனவா என்பதுதான் பிரதானம். என்னால் '**Gimmick**' செய்ய முடியாது. காட்சிகளுடன் கரைந்து போய் விட விரும்பு

# மேக்சிமா-குரூப் நிறுவனங்கள்

**MAXIMA**

மேக்சிமா பெனிபிட் பண்ட் லிமிடெட்
மேக்சிமா கிரெடிட் லிங்க்ஸ் (பி) லிமிடெட்
மேக்சிமா சிட்ஸ் மெட்ராஸ் (பி) லிமிடெட்
மேக்சிமா இன்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஸ் கம்பெனி

உங்கள் முதலீட்டிற்கு

**25%**

வட்டி+
1% ஊக்கத்தொகை
வழங்குகிறது

ஒவ்வொரு மாத வட்டிக்கான காசோலை மொத்தமாக முதலீடு செய்யும் பொழுதே வழங்கப்படும்.

## உங்கள் வருங்காலக் கனவுகளை நனவாக்கும் வளமான சேமிப்புத் திட்டங்கள்.

| | | |
|---|---|---|
| பிக்சட் டெபாசிட் | ஒவ்வொரு மாதம், காலாண்டு, அரையாண்டுகளில் வட்டி வழங்கப்படும். | குறைந்தபட்ச முதலீடு ரூ.5,000/- |
| குமுலேட்டிவ் டெபாசிட் | 45.60% P.A அதிக பட்ச வட்டியாக பெறுவீர் | ரூ.5,000/- |
| கோல்டன் டெபாசிட் | முதலீடு 3 வருடங்களில் இருமடங்காகும் | ரூ. 7,500/- |

**மேக்சிமா - உங்கள் முதலீட்டிற்கு முழுப் பாதுகாப்பு அளிக்கக் கூடியது.**

| காலம் | வட்டி |
|---|---|
| 12 மாதங்கள் | 26.80 % |
| 24 மாதங்கள் | 30.40 % |
| 36 மாதங்கள் | 32.66 % |
| 48 மாதங்கள் | 39.67 % |
| 60 மாதங்கள் | 45.60 % |

மேலும் விவரங்களுக்கு
**மேக்சிமா இன்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஸ் கம்பெனி**
**பதிவு அலுவலகம் :** 1, வேதாந்த தேசிகர் தெரு, லஸ் பஜார் அருகில், மயிலாப்பூர், சென்னை - 600 004. தொலைபேசி : 4941849, Fax : 044-4347655. தந்தி : MAXFIN
**தலைமை அலுவலகம் :** 146, எல்டாம்ஸ் ரோடு, சென்னை - 600 018. தொலைபேசி : 456950 / 458549 / 452559
**கார்ப்பரேட் அலுவலகம் :** 'ஜெயம் பில்டிங்' AA-147, 3வது அவின்யூ, அண்ணா நகர், சென்னை - 600 040 தொலைபேசி : 6280468

Aparna

**கிளை அலுவலகங்கள் : -**

K.R. பில்டிங் 124-A, லேட்டிஸ் பிரிட்ஜ் ரோடு, அடையாறு, சென்னை - 600 020 தொ.பே. 415511

'ராஜ ராஜேஸ்வரி டவர்' 567-568, டாக்டர் நஞ்சப்பா ரோடு, காந்திபுரம், கோயம்புத்தூர்-641 018. தொ.பே. 231938

**மேக்சிமா - அதிகபட்ச நம்பிக்கைக்குரியது.**

## கோவை மாவட்ட வாசகர்களே, 'கலகல கோவை'யை நினைவுபடுத்துகிறோம்!

**உங்களுக்கென்றே கல்கியில் சில பக்கங்களை ஒதுக்கப் போகிறோம். அவற்றை உங்கள் 'கலகல' படைப்புகளால் நிரப்புங்கள் பார்க்கலாம்!**

**இதோ நிபந்தனைகள் :**

- **இப்போது கோவை மாவட்டத்தில் வசிப்பவர்கள் மட்டுமே எழுதலாம்.**
- **எழுதும் விஷயங்கள் - ஜோக், துணுக்கு, உண்மைச் சம்பவம், புது - மரபுக் கவிதைகள், மாணவர் நியூஸ், நையாண்டி - என எதுவாயினும் போஸ்ட் கார்டில் மட்டுமே எழுதலாம்.**
- **எழுதப்படும் விஷயம் 'கலகல' என்று அமைய வேண்டியது கட்டாயம்.**
- **பிரசுரமாகும் படைப்புகளுக்குச் சன்மானம் உண்டு.**
- **உங்கள் படைப்புகளின் தரத்தைப் பொறுத்து அதிகபட்சமாக நான்கு வாரங்கள் வரை 'கலகல கோவை' பகுதி தொடர்ந்து வெளியாகும்.**
- **தலைசிறந்த படைப்புக்குச் சிறப்புப் பரிசு உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**
- **போஸ்ட் கார்டின் முகவரி பகுதியில் 'கலகல கோவை' என்று குறிப்பிடவும்.**

**இதர மாவட்ட வாசகர்கள் பதற வேண்டாம்! உங்களுக்கும் வாய்ப்பு வரும்.**

**- ஆசிரியர்.**

கிறேன். இந்தப் படத்தில் எனக்கு அந்தச் சுதந்திரம் இருந்ததால் ஓரளவுக்குச் சிறப்பாக செய்ய முடிந்தது."

**கே**மராவைக் கையாளுவதில், ராஜீவ் மூலம் ஒரு புது 'ட்ரெண்ட்' இன்று உருவாகியிருப்பதைப் படம் பார்த்தவர்கள் ஒப்புக் கொள்வார்கள். குறிப்பாக 'உயிரே உயிரே' பாடல் காட்சிகளில் அவர் கையாண்டிருக்கும் உறுத்தாத, வெல்வெட் லைட்டிங் முறை மற்றும் இரண்டு நீள காட்சிகளை யாரும் எதிர்பாராவண்ணம் ஒரே ஷாட்டில் அடக்கியிருக்கும் லாகவம்... 'பம்பாய்' படத்தின் முதல் ஹீரோ ராஜீவ்தான் என்று சொல்ல வைக்கிறது.

தொடர்ந்து சினிமாவில் பணியாற்றுவது குறித்து எவ்வித அபிப்பிராயமும் இல்லாதிருக்கிறார் ராஜீவ். வருகிற வாய்ப்புகளை ஒப்புக் கொள்வதில்லை. "எனக்கு, என் விளம்பர நிறுவனம் இருக்கிறது. 15 பேர் பணியாற்றுகிறார்கள். மாதத்திற்கு இரண்டு, மூன்று விளம்பரப் படங்கள் செய்ய வேண்டி இருக்கிறது. வருஷக்கணக்கில் ஒரு சினிமாவுக்காக மெனக்கெடுவதில் எனக்கு விருப்பமில்லை. சமீபத்தில் 'பாண்டிட் குயின்' பார்த்தேன். என்ன ஒரு தரமான படம்! அது மாதிரி படங்களுக்குப் பணியாற்றுவது சவாலான விஷயம். மற்றபடி சாதாரண கமர்ஷியல் படங்களில் எனக்கு விருப்பமில்லை."

**த**மிழ் சினிமாவுக்கு முற்றிலும் புதிதான சில லொகேஷன்களை 'பம்பாயில்' அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள்.

'உயிரே, உயிரே' பாடலில் வரும் அந்த மலைப்பாறையில் மோதும் கடல், பனிங்கு வெளிப் பிரதேசம் பற்றிப் பேச்சு வந்த போது மிகவும் உணர்ச்சிவசப்பட்டவராக ராஜீவ் சொன்னார் :

"ரமணிகா புடைவை விளம்பரத்துக்காக கேரளா பார்டர் - காஸர்கோட் அருகேயுள்ள அந்த இடத்திற்குப் போயிருந்தேன். இயற்கையின் ஒட்டுமொத்த அழகைச் சாறெடுத்துத் தெளித்தாற் போல அங்கே ஒரு தோற்றம்... என் மனத்தை விட்டு நீங்காத அந்தப் பிரதேசம் பற்றி மணிரத்னத்திடம் சொன்ன போது, அதைத்தான் அவர் 'உயிரே உயிரே' பாடலில் பயன்படுத்திக் கொண்டார். என் வருத்தமெல்லாம் இதுதான்... இனி மொத்த சினிமாக்காரர்களும் அந்த இடத்தை முற்றுகை இடப் போகிறார்கள்... அது ஒரு டூரிஸ்ட் ஸ்பாட் ஆகி விடப் போகிறது. இது வரை கலையாத அந்த மோன அழகு இனி அங்கே கிடைக்குமா என்று கவலையாக இருக்கிறது..."

**வி**ளம்பரப் படத் தயாரிப்பில் தேசிய அளவில் சிறந்த ஒளிப்பதிவாளராக விருதெல்லாம் வாங்கியிருக்கும் முப்பது வயது ராஜீவ், "கொஞ்ச நாள் - ஒரு ஆறு மாதம்; ஒரு வருடம் - வெளிநாடு சென்று சிறந்த ஒளிப்பதிவாளர்களிடம் அஸிஸ்டெண்ட்டாகப் பணியாற்றி வரலாமென்றிருக்கிறேன்!" என்கிறார்.

இப்படிப்பட்டவரைத்தான் "நிஜமான கலைஞன்" என்று பெரியவர்கள் சொல்வார்களோ!

**— பா. ராகவன்**

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

SERVICE IS OUR MOTTO

## CHINMUDRA GROUP OF COMPANIES

112, R.K. MUTT ROAD (1st Floor)
MANDAIVELLI, MADRAS - 600 028. PH : 4937040

**"A friend in your need"**

| OFFERS YOU | A GOOD RETURN FOR YOUR INVESTMENTS |
|---|---|

A good rewarding carrier

Join with us as Sales Promotion Executive & earn more

You can decide your earnings by your hard work.

Meet our councilor for better prospectus.

**24% + Attractive Incentives.**

Retired persons can enjoy our Special previlages.

**Ideal schemes for all House wifes & youngsters.**

Tailor made schemes for all your needs.

Say your need and forget Your worries.

We give plans which solves your problem definitely.

Visit our Office once and get relief from your Financial Strain.

We also promote chits, shares, small savings schemes and Real Estate.

**Save and grow with us.**



RANI V. SUNDARA RAO
Founder of
RANEE SAREES

# RANEE SAREES

JSV TEX MADURAI - 12.

## SUMMER DISCOUNT SALE

**DATE : 1-4-95 To 15-4-95**

AT



வைத்தியம்

## பர்வதா சாரீஸ்

**HL Jari Sungudi Sarees**

1, வடக்கு மாடவீதி, மைலாப்பூர்,
சென்னை - 600 004.



பாப்பா இந்தா கலர் கலரா ஐஸ் புருட்..!
பட்ஜெட்டில் வரிச்சலுகை -கள் அரிசி விலை குறைப்பு
நெடுஞ்செழியன்
ஜெ
வாக்குச் சீட்டு
தமிழக மக்கள்
பொதுச் சொத்துகள் சேதம்
டாடா!
ராமதாஸ் அறிக்கை
அஞ்சு நாள்ல இந்த நொறுக் -கு நொறுக்கிட் -டாரே...இன்னும் ரெண்டு நாள் உள்ள வச்சிருந் -தா என்னகதி ஆகியிருக்குமோ
கருணாகரன்
இத கொடுக்கமாட்டேன் போ..!
சட்டமன்ற காங்கிரஸ் கட்சி தலைமை பதவி
ஏ.கே அந்தோணி
கேரள முதல்வர் பதவி



ஸ்ரீ
# கல்கி



1995
ஏப்ரல் 2
பவ
பங்குனி 19
மலர் : 53
இதழ் : 35

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## தலைவலிக்கு ராமதாஸ்; திருகுவலிக்கு திவாரி!

'எல்லோரும் இந்நாட்டு மன்னர்' என்றார் பாரதியார். காங்கிரஸிலோ எல்லோரும் அக்கட்சியின் தலைவர்கள்! கேரளாவில் கருணாகரனைக் கிளப்பிவிட்டு அந்தோணி முதல்வர் பதவியில் அமர்கிறார். தமிழ்நாட்டில் குமரி அனந்தனுக்கு இணையாக வாழப்பாடி டூப்ளிகேட் தலைவராகச் சக்கைபோடு போடுகிறார்! மத்தியிலே ராவைக் கிளப்ப, அர்ஜுனரும் திவாரியும் பைலட்டும் ஃபொதேதாரும் மற்றும் பலரும் பிரும்மப் பிரயத்தனம் செய்கிறார்கள்!

அர்ஜுன் சிங்குக்கு டாட்டா சொல்லியாகிவிட்டது. அடுத்து திவாரிக்கு குட்பை கூறும் கட்டம் நெருங்குகிறது. பிரதமருக்கு எந்தவிதமாகத் தலைவலி தரலாம் என்பதே குறியாகச் சிந்தித்து, பஞ்சாபில் பகத்சிங் நினைவு நாள் கூட்டத்தில் கலந்து கொள்ளப் போவதாக அறிவித்தார் திவாரி. இந்தக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்பவர் பஞ்சாப் முதல்வருக்கு முன்னாக விளங்கும் ஜே.எஸ். பிரார். கட்சிக்கு எதிரான நடவடிக்கைகளுக்காகக் கண்டனத்துக்கும் தண்டனைக்கும் உள்ளானவர். கூட்டத்தில் பேசுவோர் ஃபொதேதார், அர்ஜுன்சிங் வகையறா. ஆக, முதல்வர் பியாந்த்சிங் வெறுத்துப் போனதில் வியப்பில்லை. ஆனால் வரம்பு மீறியது வேதனை. 'திவாரி மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்து அவரைக் கட்சியிலிருந்து சஸ்பெண்ட் செய்ய வேண்டியிருக்கும்' என்று அவர் கூறியிருக்க வேண்டாம். இதுதான் வாய்ப்பான தருணம் என்று திவாரி, காங்கிரஸ் காரியக்கமிட்டி பதவி உள்பட பல முக்கிய கட்சிப் பதவிகளிலிருந்து ராஜினாமா செய்துவிட்டார். இந்த பதில் மிரட்டல், காங்கிரஸ் உயர்மட்டத்தைப் பதறச் செய்ய, அவரை தாஜா பண்ணி ராஜினாமாவை வாபஸ் பெற வைக்க முயற்சி மேற்கொள்ளப்படுகிறது! இந்த முயற்சிக்குப் பிரதமரின் ஆசி வேறு!

இந்த உட்பூசல்கள், அதில் பங்கேற்போருக்குப் பரபரப்பைத் தரலாம்; ஆனால் மக்களுக்கு போர் அடிக்கிறது. அதன் விளைவுதான் பல மாநிலங்களில் காங்கிரஸ் அடைந்த தோல்வி. ஆயினும் யாரும் பாடம் கற்பதாகத் தெரியவில்லை.

இந்த அசிங்கத்துக்குச் சற்றும் குறைந்ததல்ல தமிழ்நாட்டில் நடக்கும் ஆளும் கட்சி - எதிர்க்கட்சிப் பூசல்கள். 'பாட்டாளி மக்கள் கட்சிக்கு வள்ளுவர் கோட்டம் அருகே ஆர்ப்பாட்டம் பண்ணத்தான் அனுமதி வழங்கப்பட்டது; ஊர்வலத்துக்கு அல்ல' என்கிறார் ஜெயலலிதா. இது உண்மையெனில், அனுமதி பெறாமலே ஊர்வலம் செல்ல முற்பட்டது, ஆட்சியில் உள்ளோருக்குத் தர்மசங்கடத்தை விளைவிக்கவே என்ற முடிவுக்குத்தான் வரமுடியும். தக்க முன்னேற்பாடுகளைச் செய்யாமல் ஒரு கட்சி ஊர்வலத்துக்குப் போலீஸ் வழி உண்டாக்க முடியாது! என்றாலும் ராமதாஸைக் கைது செய்தவர்கள், அன்று மாலையே அவரை விடுவித்து வீட்டுக்கு அனுப்பியிருக்கலாம். இதற்கு முன்னுதாரணங்கள் உண்டு. ஆனால் கலவரங்கள் விசுவரூபம் அடைந்து பொதுமக்களின் ஏராளமான சொத்து நாசமான பிறகுதான் அரசுக்கு ஞானோதயம் ஏற்பட்டு, பா.ம.க. தலைவர் விடுவிக்கப்படுகிறார்.

இதுதான் போகட்டும் என்றால், நாஞ்சில் மனோகரன் பேசும் தி.மு.க. கூட்டத்தில் எம்.எல்.ஏ. பன்னீர்செல்வம் டியூப்லைட் உடைத்து, அதன் உலோகக் கட்டையைச் சுழற்றிக் கொண்டு மேடை மீது பாய்ந்து ஏறுகிறார், தாக்குதல் நடத்த!

சகிப்புத்தன்மை இல்லாத ஜனநாயகம் உருப்படவே செய்யாது. ஆளும் கட்சியினரும் எதிர்க்கட்சியினரும் ஒருவரை ஒருவர் பகை உணர்வு இன்றி விமர்சிக்க வேண்டும் என்பது மக்கள் ஆட்சியின் அடிப்படை அம்சம். ராவ் அரசும் சரி, ஜெ அரசும் சரி. பொற்கால ஆட்சியைத் தந்துவிடவில்லை. ஆயினும் தேர்தலுக்கே இன்னும் சிறிது காலம்தான் இருக்கும்போது எதற்கு இந்தக் கவிழ்ப்பு முயற்சிகள்?

இந்த லட்சணத்தில் நடப்பு ஆண்டைச் சகிப்புத்தன்மை ஆண்டாக அறிவித்துள்ளது ஐ.நா. சபை! எவ்வளவோ மோசமான ஆட்சிகளையும் அதைவிட மோசமான எதிர்க்கட்சி அரசியல்களையும் சகித்துக் கொள்ளும் பொதுமக்களைப் பார்த்தாவது தலைவர்கள் சகிப்புத்தன்மை பெற முயற்சி செய்யலாம். ஆனால் பூசலுக்கே நேரம் போதாதபோது அவர்கள் சிந்திப்பதாவது!

# கருணாகரன் Vs அந்தோணி: ஏன் இந்தக் கசப்பு?

கருணாகரனுக்கு ஏன் இத்தனை எதிர்ப்பு? இதற்குக் கொஞ்சம் கேரள அரசியலைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

இப்போது கேரளாவில் ஆட்சி செய்வது இ. காங்கிரஸ் மட்டுமல்ல; பல்வேறு கட்சிகளும் சேர்ந்த ஐக்கிய ஜனநாயக முன்னணி. இந்தக் கூட்டணியில் அதிக பலம் வாய்ந்தது இ. காங்கிரஸ்தான் என்றாலும் அடுத்ததாகப் பலம் பெற்றிருக்கும் முஸ்லீம் லீகின் ஆதரவு இல்லாமல், இ. காங்கிரஸால் ஒரு நிமிஷங் கூடப் பதவியில் நீடிக்க முடியாது.

இதன் காரணமாகத்தான் அண்மையில் நடந்த, ராஜ்யசபாவுக்கான இரண்டு எம்.பிக்களைத் தேர்ந்தெடுக்கிற தேர்தலில் ஒரு சீட்டைத் தமது ஆதரவாளரான வயலார் ரவிக்குக் கொடுத்த கருணாகரன், அடுத்ததை தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த குட்டப்பன் என்பவருக்குத்தான் கொடுக்க வேண்டும் என்று ஏ.கே. அந்தோணி கோஷ்டியினர் கூறியதையும் மீறி, முஸ்லீம் லீகுக்குக் கொடுத்தார்.

ஆயினும் இப்போது கருணாகரன் முதல்வர் பதவியை ராஜினாமா செய்வதற்குக் காரணமாயிருந்ததே முஸ்லீம் லீக்தான். அது மாத்திரமல்ல; ராஜ்யசபா தேர்தலில் முஸ்லீம் லீகுக்குக் கருணாகரன் கொடுத்த ஒரு சீட்டுக்கு அந்தோணி கோஷ்டி எதிர்ப்புத் தெரிவித்த போதும் ஏ.கே. அந்தோணியையோ அல்லது அவர் ஆதரவு பெற்றவரையோ முழு மனத்தோடு முதல்வராக ஏற்றுக் கொள்வதாகக் கூறியதும் இதே முஸ்லீம் லீக்தான்!

அப்படியானால், கேரள முஸ்லீம் லீக் தமது முதுகில் குத்தி விட்டதாகக் கருணாகரன் கூறுவது உண்மைதானா? அதற்கு என்னதான் காரணம்?

இ. காங்கிரஸிலிருந்து அர்ஜுன்சிங் நீக்கப்பட்டதும் அவர் ஓர் அறிக்கை கொடுத்தார். அதில் பாபர் மசூதி இடிப்பு விஷயத்தில் நரசிம்மராவ் காட்டிய 'இந்து ஆதரவு' போக்கை விமர்சனம் செய்தார் அர்ஜுன்சிங். இந்த விமர்சனத்தின் மூலம், கேரள முஸ்லீம் லீகின் அமோக ஆதரவுக்குள்ளாகி விட்டார் அர்ஜுன்.

இந்த நிலையில், அர்ஜுன் சிங்குக்கு எதிராகவும் நரசிம்மராவுக்கு ஆதரவாகவும் செயல்பட ஆரம்பித்த கருணாகரனால் எப்படி முஸ்லீம் லீகின் ஆதரவைத் தொடர்ந்து பெற முடியும்? வந்தது எதிர்ப்பு. போனது பதவி.

இது ஒருபுறமிருக்க, கருணாகரனுக்கும் ஏ.கே. அந்தோ

# சின்னத் திரையும் குட்டித் திரையும்

"டெலிவிஷன் சின்னத் திரை என்றால் கம்ப்யூட்டர் என்ன திரை....?" என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டார் மிஸ்டர் எறும்பு.

"குட்டித் திரைன்'னு வேணுமானா சொல்லலாம்" என்றேன்.

"சரி, சின்னத் திரை மூலமா குட்டித் திரையை 'மாஸ்டர்' பண்ண முடியுமா...?" என்றார் கேள்வி கேட்கும் 'மூட்' மாறாமல்.

"அதாவது, ஜீ டீ.வியோ அல்லது சன் டீ.வியோ பார்த்து கம்ப்யூட்டர் பாடத்தைக் கத்துக்க முடியுமான்னு கேட்கறீங்க...?"

"அதே!"

ணிக்கும் இடையிலான கோஷ்டிச் சண்டைக்கு என்ன காரணம்? "நேர்மைதான்" என்று அந்தோணி கோஷ்டியினர் கூறுகிறார்கள். இதற்கு, மத்தியில் சிவில் சப்ளை அமைச்சராயிருந்த ஏ.கே. அந்தோணி, சர்க்கரை இறக்குமதி ஊழல் விஷயத்தில் தார்மீகப் பொறுப்பேற்றுப் பதவியை ராஜினாமா செய்ததையே முதல் உதாரணமாகக் கூறலாம் என்பது அவர்கள் கருத்து.




இதற்கு மாறாக கருணாகரனின் மகன் முரளியின் அதிகாரதுஷ்பிரயோகங்களும், சமீபத்தில் அவர் வெளிநாடுகளிலிருந்து எக்கச்சக்கமான பொருள்களைச் சுங்கத் தீர்வையின்றிக் கொண்டு வந்ததும் கருணாகரனால் துடைக்க முடியாத கறைகள் என்பது, எதிர் கோஷ்டியினரின் குற்றச்சாட்டு மட்டுமல்ல; எதிர்க்கட்சிகளின் குற்றச்சாட்டுங்கூட! கூடவே, ராக்கெட் சம்பந்தமான ரகசியங்களைக் கடத்தியதில் சம்பந்தப்பட்ட போலீஸ் உயர் அதிகாரியான ஸ்ரீவத்ஸவாவைக் குற்றத்திலிருந்து தப்புவிக்கும் தேச விரோதச் செயலிலும் கருணாகரன் ஈடுபட்டார் என்றும் குற்றச்சாட்டு.

இவற்றோடு கருணாகரனுக்கு வயதாகி விட்டதாலோ என்னவோ, கட்சிக்காரர்களிடம் மரியாதையில்லாமல் பேசுகிறார் என்பதும் சர்வாதிகாரத்தனமாக நடந்து கொள்கிறார் என்பதும் அந்தோணி கோஷ்டியினர் கூறிடும் மற்ற குற்றச்சாட்டுகள்.

இந்தக் குற்றச்சாட்டுக்களால் மட்டும்தான் கருணாகரனுக்கு அந்தோணி மேல் புகைச்சல் என்பதில்லை. இதற்கு முன்பும் கருணாகரன் முதல்வராயிருந்த போது நடந்த எஞ்ஜினியரிங் கல்லூரி மாணவர் ராஜன் என்பவரின் மரணம், போலீஸாரின் அத்துமீறலால் ஏற்பட்டதுதான் என்று பிரச்னையைக் கிளப்பியவர் அந்தோணி. அதன் காரணமாக அப்போதும் கருணாகரன் முதல்வர் பதவியை ராஜினாமா செய்ய நேர்ந்தது. ஏற்பட்டது புகைச்சல்! அதன்பிறகு மீண்டும் கருணாகரன் முதல்வரான போது சபாநாயகராக இருந்தவர் வி. எம். சுதீரன். அவர், தமது கட்சிக்காரர் என்பதற்காகச் சட்டசபையில் கருணாகரனுக்கு எப்போதும் சலுகைகள் காட்டியதில்லை. சமன் செய்து சீர்தூக்கும் கோல் போலவே தமது சபாநாயகர் பதவியை வகித்து வந்தார். அவரது நேர்மையைக் கருணாகரனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. இதன் காரணமாகவும் சுதீரனை ஆதரிக்க ஆரம்பித்த ஏ.கே. அந்தோணியைக் கருணாகரனுக்குப் பிடிக்காமல் போய் விட்டது!

— பிரின்ஸ்

கார்டூன் : நைனன்

நன்றி : இந்தியன் எக்ஸ்பிரஸ்

"அதுக்கு வீட்டுல நம்மகிட்டே கம்ப்யூட்டர் இருக்கணுமே!..."

"அமெரிக்கா அளவுக்கு, இன்னைக்கு என்ன சமையல்'னு கம்ப்யூட்டரைக் கேட்டுச் செய்யற காலம் இங்க இன்னும் வரலை... ஆனா பெரும்பாலும் எல்லா ஆபீஸ்களிலயும் கம்ப்யூட்டர் வந்தாச்சு. அதை முறையா பயன் படுத்தறதுக்குத் தெரிஞ்சுக்க வேண்டாமா?"



"ரேடியோவில் இசைப் பயிற்சி நிகழ்ச்சி கேட்டு பாட்டுக் கத்துக்கறவங்க இல்லையா? புத்தகத்தைப் பார்த்து சமைக்க கத்துக்கறவங்க இல்லையா...!"

"டி.வி மூலமா கம்ப்யூட்டர் பயிற்சி அவ்வளவு சுலபமான விஷயமா இருந்தா ஏன் காணான்



"மாப்பிள்ளைகிட்டே ஒரே ஒரு வார்த்தை சொன்னேன். என்னை வீட்டை விட்டு வெளியே துரத்திட்டார்...!"

"அப்படி என்ன சொன்னீங்க?"

"மாப்பிள்ளே! இது உங்க வீடு மாதிரி; தாராளமா எது வேணும்னாலும் கேளுங்கன்னு சொன்னேன்!"

- சுவீட் ரவி

மாதிரி மூலைக்கு மூலை கம்ப்யூட்டர் கிளாஸ்கள் முளைச்சுக்கிட்டிருக்கு....?"

"ஒரு வேலைக்கு மனு போடும் போதே கம்ப்யூட்டர் தெரியுமான்னு சர்ட்டிஃபிகேட் கேட்கறாங்களே? டீ.வி பார்த்துட்டு வந்து ஆபீஸ் கம்ப்யூட்டர்ல கத்துக்கிறேன்னா சொல்ல முடியும்?"

"சரியாச் சொன்னே. நடைமுறைக்கு ஒத்துவரக் கூடியது நேர்முக வகுப்புத்தான்னு 'ஃபோர்ஸ்ட் சி' நிறுவன செயல் இயக்குனர் கணேசன் கூடச் சொல்றார்..... டீ.வியில பாடம் நடத்தறவர்கிட்டே சந்தேகம் கேட்க முடியாதே! கம்ப்யூட்டர்ல மட்டும் ஒரு விஷயம் புரியல்லைன்னாலோ, தவறா புரிஞ்சுக்கிட்டாலோ அடுத்த கட்டத்துக்குப் போகவே முடியாது..."

"என்ன சந்தேகம் வரும், எதெதில் தவறு நடக்கும்னு ஒரு கணிப்பு ஆசிரியர்களுக்கு இருக்கும் இல்லையா....! அதை மனசுல வைச்சுக்கிட்டு டீ.வில பாடங்களை நடத்தலாமே.... பேராசிரியர் நன்னன் முதியோர் கல்வி நடத்தின மாதிரி...."

"அதையும் கணேசன்கிட்டே கேட்டுட்டேன். அவர் ஒரு பெரிய உண்மையைச் சுட்டிக்காட்டறாரு. நம்ம நாட்டுலே டெலிவிஷனை இன்னமும் ஒரு பொழுது போக்கு சாதனமாத்தான் மக்கள் நினைக்கறாங்க. அதனாலதான் கிராமங்களில் வயலும் வாழ்வும்' நிகழ்ச்சியைவிட 'ஒலியும் ஒளியும்' பாப்புலரா இருக்கு.... அப்படி இருக்கையில் சின்னத் திரையை குருவா எத்தனை சிஷ்யர்கள் ஏத்துக்குவாங்க.....?"

"ஏத்துக்கறது கஷ்டம்தான்! மேலும், ஒரு வீட்ல ஒருத்தர் கம்ப்யூட்டர் நிகழ்ச்சி பார்க்க விரும்பும் போது மத்தவங்க வேற நிகழ்ச்சி வைக்கணும்னு சொல்லலாம்....."

"இந்த விஷயத்தை ஏதாவது டீ.வி. கம்பெனிகாரங்க கிட்டே சொன்னியானா, உடனே, 'உங்கள் வீட்டுக்கு இன்னொரு டீ.வி. வாங்க வலுவான காரணம்' அப்படின்னு அதையே விளம்பரமா ஆக்கிடுவாங்க....!"

"முடிவா என்னதான் சொல்றீங்க? டீ.வியில நடத்தற கம்ப்யூட்டர் பாடமெல்லாம் Waste of time ங்கறீங்களா.....?"

"இதுதானே வேண்டாம்ங்கறது. நான் அப்படியா சொன்னேன்! ஒருத்தர் உண்மையிலேயே கவனமா இருந்து டீ.வி. பாடங்கள் மூலம் கம்ப்யூட்டர் கத்துக்க நினைச்சாலும் விருந்தாளி முதல், பவர் கட்வரை பல வடிவங்கள்ல அவருக்கு இடையூறு வரும். மேலும் கம்ப்யூட்டரை இயக்கிப் பழகணும்னா அனேகமா எல்லாருமே ஒரு கம்ப்யூட்டர் மையத்துக்குத்தான் போகணும். ஏற்கெனவே கம்ப்யூட்டர் மொழிகள் கத்துக்கிட்டவங்க வேணும்னா டீ.வி. நிகழ்ச்சி துணையோட புதுசா ஒரு கம்ப்யூட்டர் மொழி படிக்கலாம். ஆனா அரிச்சுவடியிலயிருந்து ஆரம்பிக்க முடியாது....."

"ஆமாம்! அதனாலதான் நான் கூட கம்ப்யூட்டர் கிளாஸில் சேர்ந்திருக்கேன்...." என்று கேஸை எடுத்துக் கொண்டு எழுந்தேன்.

"எங்க கிளம்பிட்டே? கம்ப்யூட்டர் கிளாஸுக்கா? All the best!" என்றார் மிஸ்டர் எறும்பு.

"இன்னைக்கு கேபிள் டீ.வில நல்ல படம் போடறான். அதனால் கிளாஸ் கட்" என்று அவசரமாக வெளியேறினேன்.

— குல்லா



• 'விக்'குக்கு முன்....

• 'விக்'குக்குப் பின்....

# வழுக்கைத் தலையன் திருப்பதி போனா...

"டேக் இட் ஈஸி பாலிஸி" பாட்டைக் கேட்டு ஜோராகத் தலையாட்டி ரசிக்கும் வழுவழா தலையர்களுக்குக் கூட உள்ளூர ஒரு 'காம்ப்ளெக்ஸ்' இருக்கத்தான் செய்கிறது. இவர்களுக்கு உதவத்தான் 'விக்' அல்லது டோப்பா.

ஆனால் கண்ணாடி, சீப்பு வாங்குகிற மாதிரி கூச்சமின்றி விக் வாங்க முன்வருவார்களோ?

லயன்ஸ் கிளப் அண்மையில் நடத்திய ஓர் அகில இந்திய மாநாட்டில் ஸ்டால் எடுத்து விக் பரப்பியிருந்த ஒரு நிறுவனத்தின் பங்குதாரரான சுவாமிநாதன் சொன்னார் :

"நீங்க நினைக்கிறது சரிதான். விக் அணிய விரும்புறவங்கள்ல பெரும்பாலோர் ரொம்ப கூச்சப்படுறாங்க. 'விக்' சமாசாரமெல்லாம் சினிமாக்காரங்களுக்குத் தான் லாயக்கு என்கிற எண்ணமும் அதிகம்."

செயற்கை இழைநார்களைத் தவிர்த்து, இயற்கையான மனித முடியிலிருந்தே 'விக்' தயாரிப்பது இவர்களின் ஸ்பெஷாலிடி.

தயாரிப்பு எப்படி?

"மூலப் பொருளான மனித முடிகளை நாங்க பெரும்பாலும் திருப்பதி தேவஸ்தானத்திலிருந்து ஒவ்வொரு மாதமும் பகிரங்க ஏலத்தில் மூட்டையாக (ஒரு கிலோ ஆயிரம் ரூபாயிலிருந்து இரண்டாயிரம் வரை) வாங்குகிறோம். நீளம் குட்டை, சுருட்டை, செம்பட்டை, சாம்பல் என்று அனைத்துவகை முடிகளும் மூட்டைக்குள் அடங்கியிருக்கும். நீள முடிகள் அதிகமிருந்தால் அது எங்கள் அதிர்ஷ்டமே. ஏனெனில் விக் தயாரிக்க உதவும் முடியின் நீளம் குறைந்தது பத்து செ.மீட்டராவது இருக்க வேண்டும். நிறம், தன்மை, நீளத்திற்கேற்ப முடிகளை ரகவாரியாகப் பிரித்து அசுத்தம் நீக்கி, இரசாயன சேர்க்கை மூலம் துர்நாற்றம் மற்றும் கிருமிகளை அகற்றி, இறுதியாக ஷாம்பு குளியலையும் அளித்து 'விக்'





"ஏம்பா வீடு வீடாக ஏறி பிச்சை கேட்க உனக்கு வெட்கமா இல்லை?"

"என்னங்க செய்யறது? என் வீடு தேடி வந்து பிச்சை வழங்கும் அளவுக்கு நாட்டில் தர்மசிந்தை வளரலையே?"

- பக்தன்

தயாரிக்கும் பக்குவநிலைக்குக் கொண்டு வருகிறோம்!" என்று விளக்கினார் சுவாமி நாதன்.

பிறகு அவரவரின் ரசனைக்கும் தேவைக்கும் ஏற்ப தயாரித்துக் கொடுக்கப்படும். ஒரு விக்கின் விலை ஆயிரத்து ஐநூறு ரூபாயிலிருந்து ஐயாயிரம் ரூபாய் வரை! மூலப் பொருளான முடியைத் தவிர மற்ற பொருட்களான தையல் இயந்திரம், விக்கைத் தலையில் படியச் செய்யும் உயர்ரகப் பருத்தி விலை (இது லண்டனிலிருந்து தருவிக்கப்படுகிறது) என்று அனைத்துமே வெளிநாட்டிலிருந்து தருவிக்கப்படுவதால்தான் விக் காஸ்ட்லியாக இருக்கிறது என்று காரணம் காட்டுகிறார் சுவாமிநாதன்.

"ஸ்டால் போட்ட பின்னர் பொது மக்களிடையே வரவேற்பு எப்படி இருக்கிறது?" என்று ஆரம்பித்த இடத்திற்கே நாம் மீண்டும் வந்து கேட்டவுடன், "சிறிது வியாபாரம் நடந்தாலும் பொது மக்களின் கூச்சம் இன்னும் விடுபடவில்லை. 'விக்' தேவைப்பட்டவர்கள் கூட எங்கள் ஸ்டாலுக்கு வந்தவுடன் ஏதோ தங்களுக்குச் சம்பந்தமில்லாத ஒரு பொருளைப் பார்ப்பதைப் போல்தான் பார்க்கிறார்கள். போகும் போது நாங்கள் கொடுத்த விசிட்டிங் கார்டைக் கூட வேண்டா வெறுப்பாகத்தான் பையில் திணித்துக் கொண்டார்கள். ஆயினும் அந்த வார முடிவிலேயே அவர்களில் பலர் ஓசைப் படாமல் எங்கள் கடைக்கு வந்து தங்கள் தலையின் அளவைக் கொடுத்து 'விக்' தயாரித்துத் தருமாறு கேட்டுக் கொண்டனர்! எனவே நகரின் மையப் பகுதியில் இருக்கும் எங்கள் கடையை, வாடிக்கையாளர்களின் உணர்வுகள் கருதி, ஒதுக்குப்புறமாயுள்ள ஒரு தனி பங்களாவிற்கு மாற்ற இருக்கிறோம்!" என்று எதிர்காலத் திட்டத்தைக் கூறுகிறார் சுவாமிநாதன்.

இயற்கையாகத் தோற்றமளிக்கும் வகையில் 'விக்'குகளைத் தயாரிப்பதற்கு, திரைப்படத் துறையில் புகைப்படக் கலைஞராகப் பணியாற்றிய ஹரியும், சிகை ஒப்பனைக் கலைஞராக இருந்த பாஸ்கரும் உதவி புரிகின்றனர். ஆக, சிலுக்கு, ஷில்பா ஷெட்டிக்கு மாத்திரமல்ல; நம்மைப் போல் (அட, நீங்களும் நானும் அல்ல!) உள்ள சாதாரண வழுக்கையர்களுக்கும் விக்குகள் தயாராக உள்ளன. இருந்தாலென்ன? வழுக்கையும் ஓர் அழகுதானே என்கிறீர்களா! அப்படியானால் ஜூட்!

— கீதாமோஹன்

"ஒரு கிலோ முற்றல் வெண்டைக் காயைப் பொறுக்கி இப்படி வைப்பா!"

"முற்றல் வெண்டைக்காய் எதுக்கு ஸார்?"

"முற்றல் வெண்டைக்காயை நீ தனியா வெச்சுட்டால் நான் கால் கிலோ இளசா பொறுக்கச் சுலபமாயிருக்கும்!"

- ஞா. ஞானமுத்து





"ஆபரேஷன் முடிஞ்சு, பேஷண்ட் மயக்கம் தெளிஞ்சு பேசின உடனே டாக்டர் ஏன் பேய், பூதம்னு கத்திக்கிட்டு ஓடினார்?"

"அவர் ஆபரேஷன் பண்ணி இது வரை யாரும் பிழைச்சதில்லை. அதனால டாக்டர் தப்பாப் புரிஞ்சுக்கிட்டார்!"

- வெ. ராஜாராமன்

# சின்னமணி

**கா**தலித்தவனை மறக்க முடியாததால் கட்டினவளை ஏற்கத் தவிப்பவன் பற்றிய பழைய கதைதான். ஆனால் யாரும் எதிர்பார்க்காத வண்ணம் மிக நேர்த்தியான திரைக்கதை, அளவெடுத்த வசனங்கள், பொருத்தமான வெளிப்பாடு என இங்கே அங்கே நகர முடியாதபடிக்குக் கட்டிப் போடும் புதிய இயக்குநருக்கு ஒரு சபாஷ். மாறுபட்ட ரீ-ரெக்கார்டிங்கிலும், 'வந்தது ஒரு மந்திரம்' பாடலிலும் அசத்துகிற தேவாவுக்கும்...

டைட்டில் நாயகி கஸ்தூரி 'நடித்து' முன் எப்போதேனும் பார்த்திருக்கிறீர்களா?

இதில் பார்க்கலாம். பால்ய விதவை, வயசுக் காலத்து ஏக்கம்... சோகம்... விரக்தி பிரதிபலிப்பு... எதிர்பாராதவிதமாகக் கிடைக்கும் மறுவாழ்வின் போது அந்த முகத்தில் சட்டென்று பற்றிக் கொள்கிற பிரகாசம்... மிகவும் உழைத்திருக்கிறார்.

சப்தமில்லாமல் விதவை மறுமணத்துக்குக் குரல் கொடுத்திருக்கும் கதை. எங்கே வழக்கம் போல இறுதியில் 'கண்கள் பனிக்க' வைத்து விடுமோ என்கிற நினைப்பைத் துடைத்தெறிந்து, கம்பீரமான அந்த பாஸிட்டிவ் கிளைமாக்ஸ்...

மறுபடியும் இயக்குநரைப் பாராட்டத் தோன்றுகிறது.

அப்புறம்... ஹீரோ நெப்போலியன். 'முகமாகப்பட்டது முரட்டுத்தனம் காட்ட மட்டுமல்ல என்பதை இனிவரும் படங்களில் உணர்ந்தால் சரி. ஏனெனில் தவிர்க்க முடியாத காதல் காட்சிகளில் கூட, எந்த நிமிஷம் அரிவாள் தூக்கி விடுவாரோ என்று பயமாயிருக்கிறது.

மாறாக பயில்வான் ரங்கநாதனும் வடிவேலும் தருகிற நகைச்சுவை விருந்து ரசனைக்குரியது. துண்டுத் துண்டு ஜோக்குகளாக அல்லாமல், எக்ஸ்பிரஷன்கள் மூலம் ஹ்யூமர் கொண்டு வர முயன்று வென்றிருக்கிறார்கள்.

'சாராயம் வேணாங்க' என்று சொல்லும் பாடலில் கூட அரைகுறை உடை, நடன அசைவுகளில் தொக்கி நிற்கும் விரசம் உள்ளிட்ட சாபக்கேடு விஷயங்கள் ஆங்காங்கே தென்பட்டாலும் ஒரு புதிய இயக்குநரின் ஆரோக்கியமான கதை சொல்லும் பாணிக்கு முன் அவற்றை மன்னித்து விடலாம் என்றே தோன்றுகிறது!

— ஆர்.பி.ஆர்.



# சுட்டுவிடு, சூரியா!

**3** சென்னை, டிசம்பர் 30, 1994

**வா**சலில் நின்ற அந்த உருவத்திற்கு கூடை கவிழ்த்தாற்போல் செம்பட்டைத் தலை; தேங்காய் துருவலாம் போல முன் துருத்திய பற்கள் நான்கு; கம்பளிப் பூச்சியாகப் பருத்த புருவங்கள்; மொச்சைக் கொட்டை சைஸில் கன்னத்தில் கருத்த மரு.

அந்த உருவம் இரு கைகளை முன் நீட்டி அழைத்தது. கோரமாக இளித்தபடி 'வா' என்றது கரகரத்த குரலில்.

கங்கா மறுபடி அலறினாள். அவள் உடல் வெடவெடவென்று நடுங்கத் துவங்கியது.

"பயப்படாதே கங்கா! நான்தான் உன் சூர்யா!"

பதற்றமாகச் சொன்ன அந்த உருவம், தன் செம்பட்டை விக்கை விலக்கி, இன்ன பிற முரட்டு மேக்கப்பை அவசரமாகக் கலைக்கவும் –

"ஆ! சூர்யா! நீங்களா..."

பெரிதாக விம்மல் வெடிக்க, அவனை நோக்கி தாவிச் சென்றாள்.

"என் அமெச்சூர் அதிர்ச்சி வைத்திய முயற்சிக்கு மன்னித்து விடு கங்கா!"

நடுங்கிய பறவை அவனிடம் ஒடுங்கியபடி, "என்ன...என்ன...சொ.. சொல்கிறாய்?" என்று திக்கியது.

அவன் அசட்டுச் சிரிப்புடன் "பல சினிமாக்கள் பார்த்த பாதிப்பு! ஒரு அதிர்ச்சியில் மறைந்த நினைவு, இன்னொரு அதிர்ச்சியில் திரும்பி விடலாம் என்று நினைத்தேன்! ஐயாம் சாரிம்மா!"

"தனிமையில், இரவில் எவ்வளவு கோரம் தெரியுமா? என் குலை நடுங்கிவிட்டது!"

அவளிடம் இன்னமும் விசிப்பு மிச்சமிருந்தது. அவனை இறுகக் கட்டிக் கொண்டிருந்தாள். ஆதாரவாகத் தடவிக் கொடுத்தான்.

ஒரு பருவப் பெண்ணின் அண்மை சூர்யாவைப் பரவசப்படுத்தியது. கங்காவின் கன்னத்தில் உஷ்ணமாக உரசியது அவன் உதடு. வெட்கத்தில் சிவந்தது அவள் முகம்.

"உன்னை பயமுறுத்தியதும் ஒரு வகையில் நல்லதுதான்."

"என்ன...என்ன நன்மை?"

"இந்த இனிய இணைப்பு கிட்டியிருக்குமா?" என்று இன்பமுடன் கிசுகிசுத்து விட்டுத் தாபமுடன் அவள் முகம் நோக்கிக் குனிந்தான்.

"சாரி சார்! எல்லாம் நம் திருமணத்திற்கு அப்புறம்தான்!"

விலுக்கென்று விலகிக் கொண்டு கண் சிமிட்டிச் சிரித்தாள்.

**ஜனவரி 2, 1995**

**க**ண்காணிப்பைச் சிறிது நேரமே செய்துவிட்டு சீக்கிரமே திரும்பியிருந்தான் சூர்யா. மொட்டை மாடியில் காற்று வீசியது.

கங்கா மேற்கு திசை நோக்கி மெய்மறந்திருந்தாள்.

"அப்படியென்ன அங்கே பார்க்கிறாய்?"

கங்கா திரும்பாமல் "எங்கே கவனம் சூர்யா? கண் முன் பார் கவிதை!"

சூரியன் ஆரஞ்சாக மெல்ல அடிவானத்தில் தன்னை 'இழக்க', பிரதேசமே பொன்னிறப் பூச்சில்.

"உன் அருகாமையில் எதையுமே கவனிக்க மறந்துவிடுகிறேன் கங்கா!"

"அப்படியா?" என்று கங்கா மகிழ்ச்சியுடன் திரும்பினாள்.

"நான் இவ்வளவு சடுதியில் காதல் வயப்படுவேன் என்று நினைத்ததில்லை டார்லிங்! நீ என்றும் என்னுடையவள் என்ற நினைப்பே இனிக்கிறது!"

கங்கா பரவசமுடன் அவனைப் பார்த்துச் சிரித்தாள். பாக்கட்டிலிருந்து ஒரு சிறு பார்சலை எடுத்துக் கொடுத்தான்.

"என்ன இது?"

"என்னவளுக்கு என் காதல் பரிசு!"

அவள் பரபரப்புடன் வண்ணத்தாளைப் பிரித்ததும் ஒரு அட்டைப்பெட்டி. அதன் மேல் ஸ்கெட்ச் பேனாவால் 'டு மை டியரஸ்ட்' என்ற சூர்யாவின் கைவண்ணம்.

"உன் அன்பு என்னை நெகிழ்த்துகிறது சூர்யா!"

"எமோஷனல் ஆகாதே டியர். பெட்டியைத் திற."



திறந்தான். உள்ளே ஓர் அழகிய தங்கச் சங்கிலி. மிக மலர்ச்சியுடன் வெளியே எடுத்தான். சங்கிலியில் ஆர்ட்டின் வடிவில் தடித்த தங்க லாக்கெட் ஒன்றும் ஊசலாடியது.

"அற்புதமான சங்கிலி!"

"மிக அற்புதமான ஒரு தேவதைக்கு!"

"கொள்ளை விலை இருக்குமே சூர்யா!"

"விலை மதிப்பற்ற என் காதலுக்கு!"

ஆசையுடன் அவளே கங்காவிற்கு அணிவித்தான். அந்தச் சங்கிலி அவளுக்கு மேலும் அழகு செய்தது.

**ஜனவரி 5, 1995**

**கா**லை 8:00 'குப் குப்' பைப் சற்றே இளைப்பாற, விஞ்ஞானி ப்ரகாஷ் ராவ் தேன் குடித்த நரி மாதிரி இருந்தார். சூர்யா சைகையாகத் தன் கட்டை விரல் உயர்த்தி வினவ-

"எஸ்!" என்றார் ப்ரகாஷ் அடக்க முடியாத பெருமித முகத்துடன்.

உவகையுடன், உளமாற வாழ்த்துத் தெரிவித்தான். அவர் கரம் பற்றிக் குலுக்கி விட்டு முத்தமிட்டான்.

"இன்று இந்தியாவிற்குப் பொன்னாள்!"

"ஆம் சூர்யா!"

"காரணம் நீங்கள்!"

'இல்லை' என்று தலையசைத்து, "அவன்!" என்று மேலே கை காண்பித்தார்.

மேசை மேலிருந்த அந்த பருத்த ஃபைலை கையிலெடுத்தார் ப்ரகாஷ். வாஞ்சையுடன் அதைத் தடவிக் கொடுத்தார். கனவில் லயித்தாற் போல சில வினாடிகள் ஃபைலை வெறித்துப் பார்த்தார். மானசீகமாக 'ஹஸ்த்திரா' தெரிந்தது போலும். பரவசத் திருப்தியுடன் நிமிர்ந்தார்.

"இயான் ஃப்ளெமிங்கின் ஜேம்ஸ் பாண்டு மாதிரி நீயும் கடலாம்தானே?"

சூர்யா 'மையமாகத்' தலையசைத்து விட்டுப் புன்னகையுடன், "எதற்குக் கேட்கிறீர்கள் சார்?"

"இந்த ராக்கெட் ஃபைல் விலைமதிப்பற்றது! நீ சர்வ ஜாக்கிரதையுடன் காத்துச் செல்ல வேண்டும்..."

"கவலையை விடுங்கள். அதி ரகசியமாகவே செயல்படுவேன். அப்படியும் எவராவது இதைக் கவர வந்தால்-"

ப்ரகாஷ் ராவ் அவசரமாகக் குறுக்கிட்டு, "தயங்காமல் சுட்டு விடு சூர்யா!" என்றார் தீவிரமாக. பின்,

பிரிய மனமில்லாதவர் போல் அந்த ராக்கெட் கோப்பை சூர்யாவிடம் ஒப்படைத்தார்.

"கேர்ஃபுல் சூர்யா."

"ஷ்யூர் சார். என் உயிரை விட இதை அதிகம் மதிக்கிறேன்!"

பத்மா ரவிசங்கர்


அடுத்த இதழ் சித்திரைச் சிறப்பிதழ்!
தேவிகுளம் பீர்மேடு அப்படின்னா என்னா தெரியுமா?
சிரிக்காதிக. இது வயித்தெரிச்சல். பெரிய வயித்தெரிச்சல். காசா கொட்டற ஒரு பகுதி கேரளாவுக்குப் போயிருச்சு. வரண்ட பகுதி தமிழ் 'நாட்டுக்கு வந்துருச்சு.
ஏலத்தோட்டம் வளர்ந்து விளையறது கேரளா. காசாறது தமிழ்நாடு. எல்லாம் இந்தியாதானேன்னு சொல்வீக. இல்ல சார். அவக வேற. நாம வேற. இந்த இடத்துலேர்ந்து கேரளா எல்லை ரோடு பார்த்திகளா எப்படி மழமழன்னு.... இது எல்லாம் சரிதான். யூனியன்னு ஒன்னு ஆரம்பிச்சு.....
பாலகுமாரன்
எழுதும்
என்னுயிரும் நீயல்லவோ
— ஏலம் மணக்கும் காதல் தொடர்கதை...

"ஹா...! உன்னைப் பற்றி ஆத்மா சரியாகத்தான் சிலாகித்துச் சொல்லியிருக்கிறார்!"

"அடுத்து உங்கள் ப்ரோகிராம்?"

"அடுத்ததாகவா?" சிரித்தார். "மாறு வேடத்தில் டில்லிக்கு செல்ல வேண்டும். பின்னர் சலோ ஆஸ்பத்திரி! நானே போய் முடங்கிக் கிடப்பேன். ஓரிரு நாட்களில் கட்டுக்கள் தளர்த்தி முதலில் முகம் காண்பிப்பேன். திடுமென்று 'கோமாவிலிருந்து' ஒரு நாள் விழித்து எழுவேன்! அவ்வளவுதான். மருத்துவ விடுப்பு முடிந்து திரும்பவும் ஹாயாக என் அலுவலகம்!" உரக்கச் சிரித்தார்.

அந்தக் கோப்பு கைக்குக் கிடைத்த நொடியிலிருந்து உச்சபட்ச எச்சரிக்கையில் இருந்த சூர்யா திட்டமிட்டபடி செயல்பட்டான்.

முன்னரே 'விசாரித்து' வைத்திருந்த ஒரு ப்ரத்யேக தனியார் நிறுவனத்திற்கு நேராகச் சென்று, உடனிருந்து, இமைக்காமல் கவனித்துப் பல மணி நேரங்கள் கழிந்து சூர்யா வெளியே வந்தபோது–

ராக்கெட் ஃபைல் மைக்ரோ ஃபிலிமாக உருமாறியிருந்தது! அதற்குச் சில நிமிடங்கள் முன் அந்தப் ஃபைலைத் தீயிட்டுக் கிடைத்த சாம்பலை டாய்லெட்டில் ஃப்ளஷ் செய்திருந்தான்!

துளியும் உறக்கமின்றி, இரவைக் கழித்தான்.

### ஜனவரி 6, 1995

"ஏன் சூர்யா இன்று வெளியே செல்லவில்லையா?"

"இல்லை கங்கா. இன்று குளிப்பதாகக் கூட இல்லை!"

"ஏன் சூர்யா?"

"நேற்றிரவு சரியான உறக்கமில்லை. ஜுரம் போல உணர்கிறேன்."

அவள் அவனைத் தொட்டுப் பார்த்து விட்டு, "உஷ்ணம் இல்லையே!" பின் குறும்பாகச் சிரித்தபடி, "காதல் ஜுரமாக இருக்கும்!" என்றாள். "நீ வெளியே செல்லாதது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தருகிறது தெரியுமா?"

சூர்யா எங்கோ கவனமாக இருந்தது கண்டு, "ஹேய்! என்னாயிற்று?" என்று அவனைச் செல்லமாகத் தட்டினாள்.

"ஒ... ஒன்றுமில்லை!"

"பொய் சொல்லாதே சூர்யா! நீ இயல்பாக இல்லை! ஏதோ பெரும் பாரம் சுமப்பவன் போல் இருக்கிறாய். என்ன அது? என்ன உன் கவலை? சொல் சூர்யா."

"வீணாகக் கற்பனை செய்யாதே கங்கா."

"புரிகிறது மர்ம மனிதா!" சில்லறை கொட்டியது போல் சிரித்துவிட்டு, "உன் கவலையில் பகிர்ந்து கொள்ளத்தான் கேட்

டேன். போகட்டும். இன்று என்ன சமையல் செய்யலாம் சூர்யா?"

### இரவு 9:00

"நாள் பூராவும் அடைந்து கிடந்ததில் ஒரு மாதிரி இருக்கிறது. ஒரு 'வாக்' போய் வரலாமா சூர்யா? கேட்டபடி சோம்பல் முறித்த கங்காவிடம் எழில் சொட்டியது.

"போகலாமே" என்றான் உற்சாகமாக. "என் இதய ராணி எதைச் சொல்லி நான் மறுத்திருக்கிறேன்!"

அவர்கள் இருந்த ஏரியா ஏகாந்தமாயிருந்தது. கங்கா அவனுடன் கை கோத்துக் கொண்டாள். உரசியபடி நடந்தனர்.

பொழிந்த பால் நிலவு. குளிர்ந்த மார்கழிக் காற்று. மணந்த பங்களாக்களின் தோட்டங்கள்.

"என்ன ஒரு ரம்யமான சூழல்!"

"ஆம் கங்கா. மலைவாசஸ்தலம் போல் உணர்கிறேன்!"

"அதுவும் என் சூர்யா அருகாமையில் சூழ்நிலையின் இன்பம் இரட்டிப்பாகிறது!"

"எந்நேரமும் சாவை எதிர்பார்த்து வாழ்ந்த எனக்கும் ஓர் சொர்க்க வாழ்க்கை அமைகிறதா? என்னையும் ஒருத்தி நேசிப்பாளா?" என்றான் நம்பாமல்.

"உன்னை உலகம் உள்ளளவும் நேசிப்பேன் சூர்யா!"

சூர்யா உணர்ச்சி வசப்பட்டாற் போலிருந்தான். மரங்களடர்ந்த அகலமான அவென்யூவில் நடந்தனர். ஓர் இருள் தீவு தந்த துணிவில் அவள் இடுப்பில் கை வைத்துத் தன்னுடன் சேர்த்து அணைத்துக் கொண்டான். அவளிடமிருந்து எதிர்பாரா அதிர்ஷ்ட முத்தம் கிடைத்ததும் விடுவித்தான். திளைத்தபடி திரும்பினர்.

வீட்டை நெருங்கியதும் சூர்யா திடுக்கிட்டான்.

காம்பௌண்டு கேட் விரியத் திறந்திருந்தது. வீட்டின் வாசல் கதவும் அப்படியே... ஒன்பது லீவர் பூட்டுகள் உடைக்கப்பட்டு...

வீட்டினுள்ளே யானை புகுந்தது போலக் களேபரமாகக் கலைக்கப்பட்டிருந்தது. தினசரிகள் கலைக்கப்பட்டுக் காகிதங்கள் ஆங்காங்கே. தலையணைகள் கிழிக்கப்பட்டு பஞ்சு பறந்தது. அவர்களின் ஆடைகள் வீசி எறியப்பட்டு, மிதியடிகள் புரட்டப்பட்டிருந்தன. சமையலறையைக் கூட விடவில்லை. சொற்ப பாத்திரங்கள் உருட்டப்பட்டு, சாமான்கள் கவிழ்க்கப்பட்டு... வந்திருந்தவனின் மூர்க்கம் தெரிந்தது.

எவரோ அந்த மைக்ரோ ஃபிலிமுக்காக வந்து அல்லாடியிருக்கிறார்கள் என்று புரிந்தது. வாசற்கதவைத் தாழிட்டுவிட்டு வந்தான்.

பிரமித்திருந்த கங்கா, "என்ன இது?" என்றாள்.

"எவனோ திருடனின் கைவரிசை!"

"நல்லவேளை நான் கழட்டாமல் அணிந்திருப்பதால் என் தங்கச் சங்கிலி தப்பித்தது!"

"தாமதியாமல் பறந்து விட வேண்டியது தான்."

"எங்கே சூர்யா?"

"புது டில்லிக்கு!"

"எப்போது செல்கிறோம்?"

"நாளை அல்லது மறுநாள்!"

சமையலறைச் சாமான்களை ஒழுங்கு படுத்திவிட்டு வருவதாகக் கங்கா செல்ல, சூர்யா யோசித்தபடி நடந்ததில் சிறிது நேரம் சென்றது.

திடீரென்று அவன் சிந்தனை அறுந்தது; தன்னை எவரோ எங்கிருந்தோ கவனிக்கிறார்கள் என்று உள்ளுணர்வு. அவன் புலன்கள் கூர்மையாயின.

வெளியே தோட்டத்தில் சரசரவென்று மெல்லிய சத்தம். ஓடிச் சென்று ஜன்னல் வழியாகப் பார்த்தான். இருளில் ஒன்றும் புலப்படவில்லை. அசந்தர்ப்பமாக மேகத்தினுள் தொலைந்த நிலா. பக்கவாட்டில் மாடிப் படிகள் கீழே மறைந்திருக்கலாமோ...

சட்டென்று மின்சாரம் நின்று போனது. பூரணமான இருள். வெளியே வாசல் சுவரில் மெயின்ஸ் வைத்தவனைச் சபித்தான். அல்லது வீட்டினுள் ஃப்யூஸ் ஏதும் போய் விட்டதோ...

"கங்கா மெழுகுவர்த்தி ஒன்று ஏத்தி வா."

பதிலில்லை.

"கங்கா!" பதற்றமுடன் கூவினான். "ஆர் யூ ஆல்ரைட்?" பாத்ரூமில் இருக்கிறாளா... மறுபடி அழைத்தான். மறுபடி மௌனம். கொல்லைக் கதவும் திறந்திருக்குமோ... பாய்ந்து சென்று ஹால் அலமாரியில் கை வைத்தான்.

அவன் துப்பாக்கியைக் காணவில்லை! வீட்டினுள் அலமாரியில்தான் வைத்தான். அவசரமாக அலமாரி முழுவதும் துழாவினான். துப்பாக்கி கிடைக்கவில்லை! எவரோ–

வாசலில் ஒரு ஜோடி காலணி ஒலி– எவரோ அத்துமீறியுள்ளதை மறைக்க முயற்சி செய்யாமல் – உரத்துக் கேட்டது. பிறகு, தகரத்தைத் தரையில் வைத்துச் சுரண்டினாற் போல் ஒரு விநோத ஒலி எழுந்தது. என்ன செய்கிறார்கள் இங்கே....

திடுதிப்பென்று கங்காவின் 'வீல்' என்ற அலறல் கேட்டது!

பின்கட்டை நோக்கிப் பாய்ந்தான். திக்குத் திசை தெரியாத இருட்டு. தட்டுத் தடுமாறி சர்வீஸ் வராந்தாவிற்காகத் திரும்ப–

காத்திருந்த ஓர் உருவம் அவன் பின்னந் தலையில் கனமான பொருளால் நச்சென்று தாக்க– சடுதியில் மயக்கமாகிச் சரிந்தான் சூர்யா!

(தொடரும்)

# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990

பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2. ph: 848917

கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569




### பிக்சட் டிபாசிட்

| 46நாள் | 3மாதம் | 6மாதம் | ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%**

5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

**PB பாண்டு**

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- மாத வட்டி ரூ.1.85 மட்டுமே
- விரைந்த சேவை.
- சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- R.D. கட்டத் தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



**பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.**

## பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.



சேர்மன்:

**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
கந்தகோட்டம்,
சென்னை-600 003.
ஆலோசகர்
பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிட்.

**இயக்குநர்கள் குழு**

R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday (It is a P.B. Group Concern) B.O. Tuesday Holiday



கடந்த ஆண்டின் மிகச் சிறந்த நிர்வாகி என்கிற விருதைப் பெற்றிருக்கிறார், எம்.ஆர்.எஃப். அதிபர் கே. எம். மம்மன் மாப்பிள்ளை. முழுப் பெயரையும் சொல்ல வேண்டுமானால், கண்டத்தில் மம்மன் மம்மன் மாப்பிள்ளை! அது என்ன மாப்பிள்ளை என்பவர்களுக்கு : திருவிதாங்கூர் சமஸ்தானம் இவர்கள் குடும்பத்திற்குக் கொடுத்த பட்டப் பெயர்தான் அது.

அவரைச் சந்தித்துப் பேசிய போது, சுமாரான வசதியுள்ள குடும்பத்தைச் சேர்ந்த ஓர் இளைஞர் எந்த அளவுக்கு முன்னேறி, உலகளாவிய அளவில் போட்டி போட இயலும் என்ற யதார்த்தம் பிரமிக்க வைத்தது...

## ஆரம்பம்:

திருவொற்றியூரில், குடும்பத்துக்குச் சொந்தமான நிலத்தில், ஒரு சாதாரணக் கூரைக் குடிசை. சென்னை கிறிஸ்தவக் கல்லூரியில் பட்டப் படிப்பை முடித்த அந்த இளைஞர், சிறிய அளவில் அங்கே ரப்பர் பலூன் தயாரிக்கிற தொழிற்சாலை ஆரம்பித்தார்.

அப்போது - அதாவது 48 வருடங்களுக்கு முன், திருவொற்றியூரில் மின்சாரம் கிடையாது. அமுக்கினால் கீச்சுக் கிச்சென்று சத்தம் எழுப்பும் ரப்பர் பொம்மைகளையும் தயாரித்து விற்கத் தொடங்கினார். கூடமாட உதவிக்கு மனைவி. எடுபிடி வேலைக்கு நாலைந்து பேர். போட்ட முதலீடு, சுமார் பத்தாயிரம் ரூபாய்!

## லட்சியம்:

அப்பாவுடன் தி.நகரில் ஜி.என். செட்டி தெருவில் வாசம். அதனால் தி. நகரிலிருந்து திருவொற்றியூருக்குத் தினசரி போவார் இளைஞர். கூடவே தயாரிப்புக்குத் தேவையான கெமிக்கல்களையும் எடுத்துக்



கொண்டு போவார். தயாரித்த பலூன்களை நாராயண முதலித் தெருவில் தாமே விற்ற அனுபவமும் இளைஞருக்கு உண்டு!

தொடர்ந்து இப்படியே பலூனும் பொம்மைகளும் மட்டுமே செய்து விற்பதில் இளைஞருக்கு ஏனோ திருப்தி உண்டாகவில்லை. அதனால், ஸ்காலர்ஷிப் உதவியுடன் லண்டனில் ரப்பர் ஆராய்ச்சிக் கூடத்திலும், பிறகு மான்செஸ்டரிலும் பயிற்சி பெற்றார். பிரான்ஸ், மலேஷியா என்று ரப்பர் தொழிலில் நவீன உத்திகளைக் கற்றுக் கொண்டார். ஜெர்மனிக்குப் போய் ரப்பரை டெஸ்ட் செய்யும் பயிற்சியில் தேறினார்.

இந்தியாவுக்குத் திரும்பியதும், டயர் ரீ-ட்ரீடிங்குக்குத் தேவையான ரப்பரைத் தயாரிக்கும் தொழிலில் தீவிரமாக இறங்கினார் இளைஞர்.

பலத்த போட்டா போட்டி. அதுவும் பன்னாட்டு நிறுவனங்களுடன். அவர்களுடன் போட்டியிட வேண்டும் என்றால், அதற்குத் தேவையான இயந்திரங்கள் வேண்டுமே! அவற்றை இறக்குமதி செய்து கொண்டார்.

பன்னிரண்டு வருடங்களுக்குப் பிறகு...

டயர் தயாரிக்கும் தொழிற்சாலையாக அதை விரிவுபடுத்தினார் அந்த இளைஞர்.

இன்றைக்கு 1200 கோடி ரூபாய் அளவுக்கு வியாபாரம். ஆயிரக்கணக்கில் ஊழியர்கள். ஆறு தொழிற்சாலைகள் தயாரிக்கும் டயர்கள் பதினேழு நாடுகளுக்கு ஏற்றுமதியா



# ரப்பர் பலூன் விற்பனை; உலகில் நெ.1 நிறுவனம்!



கின்றன. பலூனில் ஆரம்பித்து, பார் புகழும் டயர் உற்பத்தி நிறுவனத்தின் தலைவராக உயர்ந்தவர் :

கே. எம். மம்மன் மாப்பிள்ளை.

நிறுவனம் : எம். ஆர். எஃப்!

“பண்டிட்ஜிதான் (நேருஜி) 1960-ல் மெட்ராஸ் ரப்பர் ஃபாக்டரியைத் தொடங்கி வைத்தார்!” என்றார் கே. எம்.எம்.

பிரம்மாண்டமான அவரது அறையில், அதன் குளுமையும், மகள் ரமணி ஜோசப் உருவாக்கிய செயற்கைச் செடிகொடிகளின் பசுமையும் மட்டுமல்ல; அவரது எளிமையும் நம்மைக் கொஞ்சம் அசர வைக்கிறது. பகட்டே சுத்தமாக இல்லை!

“போட்டா போட்டிதான் அப்போது தொழிலில் உச்சமாக இருந்தது. குறிப்பாகப் பன்னாட்டு நிறுவனங்கள். அவர்கள் எங்களை ஒழித்துக் கட்ட விலையை ஏகத்தாறாகக் குறைத்தார்கள். நானும் விடவில்லை. ஒரு பவுண்டு ரப்பருக்கு ஒரு ரூபாய் லாபம் கிடைத்தால் கூடப் போதும் என்ற அளவுக்குக் குறைத்தேன். நம் ஆட்களை வெளிநாடுகளுக்கு அனுப்பிப் பயிற்சி பெற்று வரச் செய்தேன். 'பாக்டரியை இழுத்து மூடுகிறீர்களா, இல்லை பலாபலன்களை அனுபவிக்கிறீர்களா?' என்று அவர்களது ஆட்கள் வந்து பயமுறுத்தினார்கள். 'உங்கள் அச்சுறுத்தல்களுக்கு எல்லாம் நான் பயந்து போய் விட மாட்டேன்!' என்று அவர்களிடமே சொன்னேன்! கடைசியில் ரீ-ட்ரீடிங் த்ரெட் ரப்பர் மட்டுமல்ல, த்ரெட் ரப்பர் கெமிகல்ஸ் துறையை விட்டே அவர்கள் பின்வாங்கிப் போக வேண்டி வந்தது!”

(ஏகபோக விற்பனை விசாரணை கமிஷனின் 1965-ஆம் வருடத்திய ரிப்போர்ட்டில், 128-ஆம் பக்கத்தில் பன்னாட்டு நிறுவனங்களின் மிரட்டலும், கே.எம்.எம்.மின் சாட்சியமும் பதிவாகி இருக்கின்றன. 'இவர் சொல்லுவதை ஏற்காமல் இருக்க முடியவில்லை' என்று கமிஷன் உறுப்பினர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள்!)

புதிய பொருளாதாரச் சூழலை கே.எம்.எம். வரவேற்கிறார். “நாம் கிணற்றுத் தவளைகளாக இனி மேலும் இருக்க முடியாது. சீனா - கிழக்கு ஐரோப்பிய நாடுகள் எல்லாம் கூட இந்த 'குளோபலைசேஷன்' சூழலில் இருந்து தனித்து இருந்து விட முடியவில்லையே! நமக்கு இனி வேறு வழியே கிடையாது. உலக அளவிலான வர்த்தகச் சவால்களை நாம் துணிச்சலோடு எதிர்கொண்டாக வேண்டும். அது மிகவும் கடினமானதுதான். நாட்டின் ஒட்டுமொத்த நலனையும் கருத்தில் கொண்டு பார்த்தால்தான் புதிய பொருளாதாரக் கொள்கையின் அவசியம் புரியும்.”

தமிழ்நாடு தொழில் துறையில் முன்னேற எவை எவை தடையாக இருக்கின்றன என்று கேட்ட போது, அரசியல் பிரச்னைகளில் அநாவசியமாகச் சிக்கிக் கொள்ள கே.எம்.எம். விரும்பவில்லை என்று தெரிந்தது.

“இப்போது இருப்பவை எல்லாம் மனிதனாக உண்டாக்கிய பிரச்னைகள்தாம். இவற்றைக் கண்டு எதற்காகச் சோர்ந்து போக வேண்டும்? நாம் நமது முயற்சிகளைத் தொடருவோம். பலன் கிடைக்காமலா போய் விடும்? கடவுள் நமக்குப் புத்திசாலித்தனத்தையும், சிந்திக்கும் திறனையும் நிறையவே கொடுத்திருக்கிறார். பிரச்னைகளைச் சமாளித்து முன்னேற திடசித்தத்தையும் கூடவே கொடுத்திருக்கிறார்!”

அமெரிக்கா உட்பட, பதினேழு நாடுகளுக்கு எம்.ஆர்.எஃப். டயர்கள் ஏற்றுமதி ஆகின்றன.

“நினைத்ததைச் சாதித்து விட்டோம் என்ற திருப்தி இருக்கிறதா?”

“திருப்தி இருக்கிறது - ஓரளவுக்கு. இந்தியாவில் நெ. 1 ஆக இருந்தால் போதுமா? இப்போது உலகில் உள்ள டயர் உற்பத்தி நிறுவனங்களின் பட்டியலில் 14-ஆவது இடத்தில்தான் இருக்கிறோம். அதில் முதல் இடத்தைப் பிடிக்க வேண்டும் என்பதுதான் லட்சியம்!”

“பலூன்களையும் பொம்மைகளையும் மறந்து போய் விட்டீர்களா?”

“மறப்பதாவது! ஃபன்ஸ்கூல் என்ற பெயரில் ஏராளமான விளையாட்டுப் பொம்மை



“உங்க ஆபீஸ்லே அந்த ஆள் மட்டும் 'சவால் விடறேன்; என் வேலையை யாராவது செஞ்சு காட்டுங்க பார்க்கலாம்'னு அடிக்கடி சொல்லிக்கிட்டே இருக்காரே, ஏன்?”

“அதுவா! மானேஜர் அவரிடம் 'உங்க வேலை ரொம்ப கஷ்டம்தான். ஆனால் ஒரு சவாலா எடுத்துக்குங்க'ன்னு சொன்னாராம்!”

— வெ. ராஜாராமன்

கள் தயாரிக்கிறோமே! அது மட்டுமல்ல, தோல் ஆடைகள் தயாரிப்பிலும், பெயின்ட் உற்பத்தியிலும் நுழைந்திருக்கிறோம். ஒரு நலிவுற்ற தொழிற்சாலையை ஏற்றுக் கொண்டோம். குளிர்நாடுகளில் லெதர் கார்மெண்ட்ஸுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. பெரிய தொழிற்சாலைகளுக்குத் தேவையான கன்வேயர் பெல்ட்டுகள் வேறு தயாரிக்கிறோம்."

ஆலப்புழையில் 1922-ஆம் ஆண்டு பிறந்தவர் கே. எம்.எம். எப்போதாவது ஊருக்குப் போனால் பிரார்த்தனை மண்டபத்தில் அமைதியாக உட்கார்ந்து பிரார்த்தனை செய்வதுண்டு.

சென்னையில் இருந்தால் காலை வேளையில் பிரார்த்தனை. மனைவி குஞ்ஞம்மாவும் சேர்ந்து கொள்வார். மாலை கொஞ்சம் வாக்கிங். ஓய்வு கிடைத்தால் ஓவியம் தீட்டுவதில் ஈடுபடுவது உண்டு. "முன்பு நாடகங்களில் நிறைய நடித்திருக்கிறேன்!" என்கிறார்.

சமூக நலப் பணிகளுக்கு எம்.ஆர்.எஃப். நிறையவே கொடுத்திருக்கிறது. 'பேஸ் ஃபவுண்டேஷன்' மூலம் இளம் பந்து வீச்சாளர்களைத் தயாரிக்கும் பணி, விளையாட்டுத் துறைக்குக் காணிக்கை.

இளம் வயதில் மகன் ரவி மம்மன் காலமானது குடும்பத்தைத் தாக்கியிருந்தாலும், இப்போது மற்ற மகன்களான வருணும் அருணும் பிஸினஸில் துணை.

1888-ல் மலையாள மனோரமாவைத் தொடங்கியவர் இவரது பாட்டனார் கே. சி. மம்மன் மாப்பிள்ளைதான். "அவர் பிரிட்டிஷாரை எதிர்த்துப் போராடியவர். அவரது செய்தித்தாளையே இழுத்து மூடியது பிரிட்டிஷ் அரசாங்கம். சுதந்திரம் வந்த பிறகுதான் பத்திரிகையை மறுபடி ஆரம்பித்து நடத்த முடிந்தது!"

இப்போதும் மலையாள மனோரமா குருப் பத்திரிகை நிறுவனத்தை இவரது குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்தான் நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.

அவரிடமிருந்து விடைபெற்றுத் திரும்பிய போது, அழகுக்கும், தூய்மைக்கும், பளபளப்புக்கும், நவீன பாணிக்கும் எடுத்துக்காட்டாக இருக்கிற எம்.ஆர்.எஃப்.பின் பிரமாண்டமான கட்டடத்துக்கு அஸ்திவாரம் மண்ணுக்கு அடியில் மட்டும் இல்லை; கே. எம். மம்மன் மாப்பிள்ளையின் உழைப்பும் உறுதியான அடித்தளமாக அமைந்துள்ளது என்று தோன்றியது.

பேட்டி, கட்டுரை : **சாருகேசி**
வண்ணப்படம் : **யோகா**

வரலாறு காணாத மிகப் பிரமாண்டமான
10 தொகுதிகள் அடங்கிய
'கந்த புராணம்' (விலை ரூ. 600/–) இலவசம்

# தமிழ் நிலையம் வழங்கும் முன் வெளியீட்டு திட்டம்

**தவணை முறையில் செலுத்தலாம்! சலுகையும் உண்டு!**

# தேவாரம்

பன்னிரு திருமுறைகள் – உரையுடன் ஏற்கனவே சில தொகுதிகளை வெளியிட்டுள்ளோம். தற்போது எஞ்சிய அனைத்துத் தொகுதிகளையும் பின்வருமாறு வெளிக்கொணர இருக்கிறோம்!

**சலுகை, இலவச நூல்கள் விவ்ரம் வருமாறு:**

*பன்னிரு திருமுறைகளுக்காக (முதல் தவணையாக) ரூ. 725/– ஏப்ரல் 5க்குள் செலுத்துவோர்க்கு உடனடியாக 10 தொகுதிகள் அடங்கிய கந்த புராணம் – இரண்டாம் பதிப்பு (10,345 பாடல்கள் ஒரு பக்கம் மூலம் எதிர்ப்பக்கம் உரை என்னும் முறையில் அமைந்தவை) இலவசமாகத் தருகிறோம்.*

| | |
|---|---|
| பன்னிரு திருமுறைகள் (24 தொகுதிகள்) விலை | ரூ. 1900 |
| கழிவு 25% | ரூ. 475 |
| சலுகை விலை | ரூ. 1425 |

*இந்தச் சலுகை விலை ரூ. 1425/–ஐ*
*பின்வருமாறு மூன்று தவணைகளில் செலுத்தலாம்.*

முதல் தவணை ரூ. 725/– ஏப்ரல் 5க்குள் அனுப்பவேண்டும்.
2ஆம் தவணை ரூ. 400/– மே 5க்குள் அனுப்பவேண்டும்.
3ஆம் தவணை ரூ. 300/– ஜூன் 5க்குள் அனுப்பவேண்டும்.

**நூல்கள் அனுப்புவது எப்போது?**

முதல் தவணை ரூ.725/– கிடைத்ததும் பன்னிரு திருமுறைகளுள் 1,2,7,8 (ஏழு தொகுதிகள்) மற்றும் கந்த புராணம் 10 தொகுதிகள் ஆக மொத்தம் 17 தொகுதிகள் உடனே அனுப்பி வைக்கப்படும். (பணம் நேரில் செலுத்துவோர் இந்நூல்களை நேரிலேயே பெற்றுக் கொள்ளலாம்.)

ஜூன் மாத இறுதியில் 3,4,9,11,12ஆம் திருமுறைகள் அனுப்பப்படும்.
ஜூலை மாத இறுதியில் 5,6,10ஆம் திருமுறைகள் அனுப்பப்படும்.

## திருமுறை – நூல்கள் – ஆசிரியர்கள் – பாடல்கள் – தொகுதிகள் – விலை அட்டவணை

| திருமுறை எண் | நூல்கள் | ஆசிரியர்கள் | பாடல்கள் | தொகுதிகள் | விலை |
|---|---|---|---|---|---|
| முதலாம் திருமுறை | தேவாரம் | திருஞானசம்பந்தர் | 1469 | 2 | 175.00 |
| இரண்டாம் திருமுறை | தேவாரம் | திருஞானசம்பந்தர் | 1331 | 2 | 175.00 |
| மூன்றாம் திருமுறை | தேவாரம் | திருஞானசம்பந்தர் | 1346 | 2 | 175.00 |
| நான்காம் திருமுறை | தேவாரம் | திருநாவுக்கரசர் | 1069 | 1 | 100.00 |
| ஐந்தாம் திருமுறை | தேவாரம் | திருநாவுக்கரசர் | 1015 | 1 | 100.00 |
| ஆறாம் திருமுறை | தேவாரம் | திருநாவுக்கரசர் | 980 | 1 | 100.00 |
| ஏழாம் திருமுறை | தேவாரம் | சுந்தரர் | 1026 | 1 | 100.00 |
| எட்டாம் திருமுறை | திருவாசகம், திருக்கோவையார் | மாணிக்கவாசகர் | 656 + 400 = 1056 | 2 | 170.00 |
| ஒன்பதாம் திருமுறை | திருவிசைப்பாக்கள் திருப்பல்லாண்டு | திருமாளிகைத் தேவர், சேந்தனார் முதலான ஒன்பது பேர் பாடியவை | 301 | 1 | 55.00 |
| பத்தாம் திருமுறை | திருமந்திரம் | திருமூலர் | 3047 | 3 | 200.00 |
| பதினொன்றாம் திருமுறை | தொகுப்பு | காரைக்கால் அம்மையார், சேரமான் பெருமாள் நாயனார் முதலான பன்னிரண்டு பேர் பாடிய பாடல்கள் | 1400 | 2 | 150.00 |
| பன்னிரண்டாம் திருமுறை | திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணம்) | சேக்கிழார் | 4286 | 6 | 400.00 |

பணத்தினை D.D. (அ) M.O. மூலம் அனுப்புக. புத்தகங்கள் வழக்கம்போல் V.P.P.யில் அனுப்பப்படும். தபால் செலவினைத் தபால்காரரிடம் செலுத்தி, நூல்களைப் பெறுக.

*பணம் அனுப்பவேண்டிய முகவரி:*


**தமிழ் நிலையம்,**

**ஏ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ், 141, உஸ்மான் சாலை,**

**தியாகராய நகர், சென்னை – 17.**

**(பனகல் பார்க் அருகில்)**

# பார்த்திபன் கனவு

## 9. விபத்தின் காரணம்

சக்கரவர்த்தியைக் குந்தவி வியப்புடன் நோக்கினாள். அவளுடைய மை தீட்டிய பெரிய கண்கள் அதிசயத்தினால் விரிந்து மலர்ந்தன. "இது என்ன அப்பா, இது? கூத்தாடிகள் அல்லவா வேஷம் போட்டுக் கொள்வார்கள்? இராஜாக்களுக்கு எதற்காக வேஷம் போடும் வித்தை தெரிய வேண்டும்?" என்று கேட்டாள்.

"ஒரு தேசத்தைப் பரிபாலிப்பவனுக்குப் பல கலைகளும் தெரிந்திருக்க வேண்டும் குழந்தாய், முக்கியமாக வேஷம் போட்டுக் கொள்ளத் தெரிந்திருக்க வேண்டும். அப்போதுதான் பிரஜைகளின் மனோபாவங்களை அவ்வப்போது தெரிந்து கொள்ள முடியும். இன்னும் சத்துருக்களைப் பற்றிய இரகசியங்களையும் தெரிந்து கொள்ளலாம். நாட்டில் குற்றங்கள் நடக்காமல் தடுக்கலாம்...." என்று சக்கரவர்த்தி சொல்லி வருகையில் குந்தவி குறுக்கிட்டாள்.

"இப்போது எந்தக் குற்றத்தைத் தடுப்பதற்காக இந்த வேஷம் போட்டுக் கொண்டீர்கள்? நான் ஏதாவது குற்றம் செய்யப் போவதாகச் சந்தேகமா?" என்று சொல்லி முல்லை மலர்வது போல் பல்வரிசை தெரியும்படி நகைத்தாள்.

"சந்தேகமில்லை, குந்தவி! நிச்சயமாகப் பெரிய குற்றம் ஒன்று நீ செய்திருக்கிறாய். உன்னால் நேற்று இராத்திரி நாலு பேருக்கு மரணம் சம்பவித்தது!" என்று சக்கரவர்த்தி சொன்னதும் குந்தவிக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"இதென்ன, அப்பா! எனக்கு ஒன்றும் தெரியாதே!"

"ஆமாம்; உனக்கு ஒன்றும் தெரியாதுதான். அயல்தேசத்திலிருந்து வந்த இரத்தின வியாபாரி ஒருவனை நீ அரண்மனைக்கு வரச் சொன்னாயா?"

"ஆமாம்; சொன்னேன், அது குற்றமா?"

"அவனிடம் நீ யாரென்று உண்மையைச் சொல்லாமல், குந்தவி தேவியின் தோழி என்று சொன்னதுண்டா?"

"உண்மைதான்; அதனால் என்ன?"

"அதனால்தான் ஆபத்து வந்தது. அந்த இரத்தின வியாபாரிக்கு நீதான் சக்கரவர்த்தியின் மகள் என்று யாரோ பிறகு சொல்லியிருக்கிறார்கள். அவன் இதில் ஏதோ அபாயம் இருக்கிறதென்று மிரண்டு போய் விட்டான். மிரண்டு அன்றிரவே உறையூருக்குக் குறுக்குக் காட்டுப் பாதை வழியாகக் கிளம்பிப் போனான்..."

"உறையூருக்கா?" என்று குந்தவி கேட்ட குரலில் மிக்க ஆச்சரியம் தொனித்தது.

"ஆமாம், அதில் என்ன அவ்வளவு ஆச்சரியம்?"

"இல்லை. அப்பா! இரத்தின வியாபாரி காஞ்சிக்கு வராமல் உறையூருக்குப் போவானேன் என்று யோசித்தேன். அங்கே அரண்மனையில் கூட ஒருவரும் இல்லையே!"

"அந்த இரத்தின வியாபாரியின் தாயார் உறையூரில் இருக்கிறாளாம். அவளைப் பார்ப்பதற்காகக் கிளம்பினானாம்...."

குந்தவி ஏதோ சொல்ல வாயெடுத்தவள், பல்லைக் கடித்துக் கொண்டு மௌனமானாள். அந்த இரத்தின வியாபாரி உண்மையில் விக்கிரமன்தானோ என்று அவள் மனத்தில் தோன்றியிருந்த சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று. அந்தச் சந்தேகம் தன் தந்தைக்கும் ஒருவேளை தோன்றியிருக்குமோ என்று எண்ணினாள். தான் ஏதாவது பிசகாகப் பேசி அவருடைய மனத்தில் சந்தேகத்தை எழுப்பக் கூடாதென்று தீர்மானித்துக் கொண்டாள்.

"என்ன, அம்மா! யோசனை செய்கிறாய்?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"ஒன்றுமில்லை, அப்பா! பழைய ஞாபகங்கள் வந்தன. உறையூருக்கு முன் தடவை நாம் போயிருந்ததை நினைத்துக் கொண்டேன்...

இருக்கட்டும் அப்பா! அப்புறம் அந்த இரத்தின வியாபாரியின் கதையைச் சொல்லுங்கள்" என்றாள்.

"காட்டுப் பாதையில் இரவில் போகும் போது அவனைத் திடீரென்று நாலு பேர் வளைத்துக் கொண்டு, வாளால் தாக்கினார்கள். ஆனால் அந்த இரத்தின வியாபாரி லேசுப்பட்டவன் அல்ல; மூன்று பேரை அவனே தீர்த்து விட்டான். நாலாவது ஆள் இந்த வாளுக்கு இரையானான்!'' என்று சக்கரவர்த்தி தம் வாளைச் சுட்டிக்காட்டினார்.

மிகுந்த வியப்புடனும் ஆர்வத்துடனும், "நீங்கள் எப்படி அங்கே அந்தச் சமயம் போய்ச் சேர்ந்தீர்கள்?" என்று கேட்டாள் குந்தவி.

"இல்லாவிட்டால் இந்தப் பெரிய சாம்ராஜ்யத்தை நிர்வாகம் செய்ய முடியுமா, குழந்தாய்?"

"ரொம்பத் தற்பெருமை அடித்துக் கொள்ளாதீர்கள்! 'நரசிம்ம சக்கரவர்த்தியின் இராஜ்யத்தில் திருட்டுப் புரட்டே கிடையாது!' என்னும் கீர்த்தி என்ன ஆயிற்று? காஞ்சிக்கும் மாமல்லபுரத்துக்கும் இவ்வளவு சமீபத்தில் திருடர்கள் ஒரு அயல் தேசத்து வியாபாரியைத் தாக்குவது என்றால்...!"

"நானும் உன்னைப் போல்தான் அவர்கள் திருடர்களோ என்று முதலில் நினைத்தேன். ஆனால், உண்மையில் அவர்கள் திருடர்கள் இல்லை."

"பின்னே யார் அவ்வளவு துணிச்சலாகக் காரியம் செய்தவர்கள்?"

"திருட்டையும் வழிப்பறியையும் காட்டிலும் பயங்கரமான விஷயம், குழந்தாய்!''

"என்ன, அப்பா!"

"அந்த இரத்தின வியாபாரியை நன்றாய்ப் பார்த்தாயல்லவா?"

"பார்த்தேன்."

"அவனைப் பார்த்த போது உனக்கு என்ன தோன்றியது?"

குந்தவி மென்று விழுங்கிக் கொண்டு, "ஒன்றும் தோன்றவில்லையே!" என்றாள்.

"அவன் முகத்தில் இராஜ களையைக் கூடவா கவனிக்கவில்லை?" என்று சக்கரவர்த்தி கேட்ட போது குந்தவிக்கு அவர் விக்கிரமனைக் கண்டுபிடித்து விட்டாரோ என்ற சந்தேகத்தினால் உள்ளம் பதறியது.

சக்கரவர்த்தி அவளுடைய மறுமொழியை எதிர்பாராமலே, "நரபலி கொடுப்பவர்களுக்கு இந்த மாதிரி இராஜ லட்சணம் பொருந்தியவன் கிடைப்பது மிகவும் அருமை!" என்றார்.

"ஐயோ!" என்று அலறினாள் குந்தவி. "அப்பா! நமது நாட்டில் இன்னுமா இந்தப் பயங்கரம்?" என்று கேட்டாள்.

"ஆமாம், குழந்தாய்! இந்தப் பயங்கர மூடநம்பிக்கைகளை வேரறுப்பதற்கு முயன்றுதான் வருகிறேன். இன்னும் வெற்றி கிடைக்கவில்லை. ஓர் இடத்தில் வேரைக் களைந்தால் இன்னொரு இடத்தில் முளைத்து எழும்புகிறது."

"பாவம்! அந்த சாது இரத்தின வியாபாரிக்கு இப்படிப்பட்ட ஆபத்து வந்ததே! நீங்கள் அச்சமயம் அங்கே போயிரா விட்டால் என்ன ஆகியிருக்கும்?"

"அவன் அப்படியொன்றும் சாது இல்லை, குந்தவி. அவனும் ஒரு திருடன் தான்; அதனால்தான் இத்தகைய ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டான்!" என்றார் சக்கரவர்த்தி.

குந்தவிக்கு ஒரு நிமிஷம் மூச்சே நின்று விடும் போலிருந்தது.

"நிஜமாகவா, அப்பா! இந்த இரத்தினம் எல்லாம் அவன் திருடிக் கொண்டு வந்ததா?" என்று கேட்டாள்.

"இல்லை, குந்தவி! அவன் இரத்தினம் திருடவில்லை. வேறொரு திருட்டுத்தனம் மாமல்லபுரத்தில் செய்யப் பார்த்தான்! நமது சிற்பிகள் சிலருக்கு ஆசைகாட்டி அவன் வசிக்கும் தீவுக்கு அழைத்துக் கொண்டு போக முயன்றான். இது எப்பேர்ப்பட்ட குற்றம் தெரியுமா, குழந்தாய்! இந்தக் குற்றத்துக்குத் தண்டனை என்ன தெரியுமா?"

"தெரியும் அப்பா!"

"ஆகையினால்தான் அவன் தன்னுடைய முயற்சி வெளிப்படாதிருக்கும் பொருட்டு மூட்டை தூக்குவதற்கு ஓர் ஊமைக் குள்ளனை வேலைக்கு அமர்த்திக் கொண்டான். ஆனால் அந்தக் குள்ளன் மேல் எனக்கு ஏற்கெனவே சந்தேகம் இருந்தது. அவன் கபாலிகர்களின் ஆள் என்று. அது உண்மையாகி விட்டது. குள்ளன் இரத்தின வியாபாரியை ஏமாற்றி உறையூருக்கு வழி காட்டுவதாகச் சொல்லிக் காட்டுப் பாதை வழியாக அழைத்துப் போனான். நான் மட்டும் சரியான சமயத்தில் போய்ச் சேர்ந்திரா விட்டால்...?"

சக்கரவர்த்தி யோசனையில் ஆழ்ந்தார்.

"அப்புறம் என்ன நடந்தது; அப்பா! இரத்தின வியாபாரி இப்போது எங்கே?"

அமரர் கல்கி



சக்கரவர்த்தி, பின்வர் நடந்ததையெல்லாம் ஒருவாறு சொல்லி அவனைத் தம்முடைய குதிரை மீதே உறையூருக்கு அனுப்பி வைத்ததையும் தெரிவித்தார்.

குந்தவி சற்றுப் பொறுத்து, "இரத்தின வியாபாரி தங்களை இன்னாரென்று தெரிந்து கொண்டானா?" என்று கேட்டாள்.

"அவனுக்குத் தெரியாது. ஏன் கேட்கிறாய்?" என்றார் சக்கரவர்த்தி.

"ஒன்றுமில்லை; வேஷம் எவ்வளவு தூரம் பலித்தது என்று தெரிந்து கொள்வதற்காகத் தான்."

பிறகு குந்தவி, "அப்பா! ஒரு விஷயம் கேட்க வேண்டும் என்றிருந்தேன்" என்றாள்.

"என்ன அம்மா!"

"அண்ணா உறையூரே பார்த்ததில்லையல்லவா? நானும் அவனும் உறையூருக்குப் போக எண்ணியிருக்கிறோம்."

"ஆகா! ஆனந்தமாய்ப் போய் விட்டு வாருங்கள். உறையூர் என்றதும் ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. நேற்று மாமல்லபுரத்தில் மாரப்ப பூபதியைப் பார்த்தேன். அவன் எங்கே வந்தான்? உனக்கு ஏதாவது தெரியுமா?"

"தெரியும். மாரப்ப பூபதியை நானும் அண்ணாவும்தான் வரச் சொல்லியிருந்தோம்..."

"என்னத்திற்காக?" என்று சக்கரவர்த்தி அதிசயத்துடன் கேட்டார்

"அச்சுதவர்மர் தமக்குத் தேகம் மெலிந்து விட்டதென்றும் இராஜ்ய காரியங்களைக் கவனிக்க முடியவில்லையென்றும் தெரிவித்தார். அதன்மேல் அண்ணா மாரப்ப பூபதியை வரவழைத்து அவனுக்குச் சோழ நாட்டின் சேனாதிபதி பதவியைத் திரும்பவும் கொடுத்திருக்கிறான்."

"ஓகோ!" என்றார் சக்கரவர்த்தி. மறுபடியும் அவர் யோசனையில் ஆழ்ந்தார். பிறகு அவருடன் பேசுவதில் பயனில்லையென்று, குந்தவி யாழை எடுத்துச் சோகம் பொருந்திய இசையை எழுப்பலானாள்.

## 10. காட்டாற்று வெள்ளம்

சென்ற அத்தியாயங்களின் சம்பவங்களும், சம்பாஷணைகளும் வாசகர்களில் சிலருக்கு விசித்திரமாய்த் தோன்றுவதுடன், சில விஷயங்கள் விளங்காமலும் இருக்கலாம். நரபலியாவது, மண்டையோடாவது, இதென்ன அருவருப்பான விஷயம்! - என்று தோன்றலாம். ஆனால் நமது தமிழகத்தின் அந்தக் காலத்துச் சரித்திரத்தை ஆராய்ந்தவர்களுக்கு வியப்பு ஒன்றும் இராது. அருவருப்பாயிருந்தாலும், உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமல்லவா?

மகேந்திர பல்லவர் காலத்திலும் நரசிம்மவர்மரின் காலத்திலும் தமிழ் நாட்டில் சைவமும் வைஷ்ணவமும் தழைத்து வளர்ந்தன. இவ்விரண்டு சமயங்களும் அன்பையும் ஜீவகாருண்யத்தையும் அடிப்படையாகக் கொண்டவை. அப்போது தேய்ந்து போய்க் கொண்டிருந்த ஜைன, பௌத்த சமயங்களின் நல்ல அம்சங்களெல்லாம் சைவ - வைஷ்ணவ மதங்களில் ஏற்கப்பட்டிருந்தன. அவற்றுடன் சிவபக்தியும், கண்ணன் காதலும் சேர்ந்து தமிழ்நாட்டைத் தெய்வத் திருநாடாகச் செய்து வந்தன. அப்பர், சம்பந்தர் முதலிய சைவ சமயக் குரவர்களும், வைஷ்ணவ ஆழ்வார்களும் தெய்வீகமான பாடல்களைப் பாடி நாடெங்கும் பக்தி மதத்தைப் பரப்பி வந்தார்கள். சிவன் கோயில்களும் பெருமாள் கோயில்களும் அற்புத சிற்பக் கனவுகளைப் போல் தோன்றி வளர்ந்து வந்தன.

ஒருபுறம் இப்படிப்பட்ட அன்பு மதங்கள் பெரும்பாலான ஜனங்களிடையே பரவி வருகையில், மிகச் சிலரான மக்களிடையே நரபலியைத் தூண்டும் பயங்கரமான கபாலிகம், சாக்தம், பைரவம் என்னும் மதங்கள் எப்படியோ இரகசியமாக வேரூன்றி வந்தன. இந்த மதங்களை அவலம்பித்தவர்கள் மிதமிஞ்சிய மூடபக்தியை வளர்த்தார்கள். மூடபக்தி காரணமாக அவர்கள் காளிகோயில்களிலும், துர்க்கை கோயில்களிலும் தங்க



ளுடைய சிரங்களைத் தாங்களே அநாயாச மாக வெட்டி எறிந்து கொண்டார்கள்! இப்படித் தங்களைத் தாங்களே பலிகொடுத்துக் கொள்வதால் அடுத்த ஜன்மத்தில் மகத்தான பலன்களை அடையலாமென்று நம்பினார்கள். இம்மாதிரி நம்பிக்கைகளை வளர்ப்பதற்குப் பூசாரிகளும் இருந்தார்கள். ஆங்காங்கு அடர்ந்த காடுகளிலும், மனிதர்கள் எளிதில் புகமுடியாத மலைப் பிராந்தியங்களிலும் காளி கோயில்களையும், துர்க்கை கோயில்களையும் இவர்கள் நிறுவினார்கள்.

மகேந்திர பல்லவரின் காலத்தில் வடக்கே வாதாபியிலிருந்து புலிகேசி என்பவன் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்த போது, அவனுடைய சைன்யங்களுடனே மேற்கூறிய பயங்கர மதங்களும் தமிழ் நாட்டில் புகுந்தன. பிறகு, புலிகேசி திரும்பிப் போன அடியோடு ஒரு முறையும், நரசிம்ம பல்லவர் வாதாபிக்குப் படையெடுத்துச் சென்ற காலத்தில் ஒருமுறையும், தமிழகத்தில் கொடும் பஞ்சங்கள் தோன்றி ஜனங்களை வருத்தின. இந்தக் காலங்களில் மேற்கூறிய நரபலி மதங்கள் அதிகமாக வளர்ந்தன.

இந்த மூட மதங்களை வேரோடு களைவதற்கு நரசிம்ம சக்கரவர்த்தி பெரும் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தார். குருட்டு மத நம்பிக்கையை ஒழிப்பதற்குத் தண்டோபாயம் மட்டும் பயன்படாது என்று அவருக்குத் தெரிந்திருந்தது. தங்களுடைய கழுத்தைத் தாங்களே வெட்டிக் கொள்ளச் சித்தமாயிருப்பவர்களை எந்தவிதத்தில் தண்டிக்க முடியும்? ஆகையால்தான் அவர் சென்ற

இரண்டு வருஷமாகத் தமது மூத்த குமாரனிடம் இராஜ்ய பாரத்தை ஒப்புவித்து விட்டுத் தாம் மாறுவேடம் பூண்டு, நாடெங்கும் சஞ்சரித்து, மேற்படி மதங்கள் எவ்வளவு தூரம் பரவியிருக்கின்றன, எங்கெங்கே அந்த மதங்களுக்கு வேர் இருக்கிறது என்பதையெல்லாம் கண்டுபிடிப்பதில் ஈடுபட்டிருந்தார். இதனாலேதான் விக்கிரமனுக்கு நேர வதற்கிருந்த பேராபத்திலிருந்து அவனைச் சக்கரவர்த்தி காப்பாற்றுவதும் சாத்தியமாயிற்று.

ஆனால், விக்கிரமனோ தனக்கு நேர இருந்த அபாயம் எப்படிப்பட்டதென்பதை அறிந்து கொள்ளவில்லை. தன்னைத் திருடர்கள் தாக்கியதாகவே அவன் எண்ணியிருந்தான். ஒற்றர் தலைவனிடம் விடைபெற்று அவனுடைய குதிரை மீது ஏறிச் சென்ற விக்கிரமனுடைய உள்ளத்தில் பலவிதமான எண்ணங்கள் அலை மேல் அலை எறிந்து கொந்தளித்துக் கொண்டிருந்தன. அன்னையைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை அவனுடைய உள்ளத்தில் முதன்மையாக இருந்தது. ஒற்றர் தலைவனின் உயர்ந்த ஜாதிக் குதிரை எவ்வளவோ விரைவாகச் சென்றும், அவனுடைய உள்ளத்தின் வேகம் காரணமாக, "குதிரை இன்னும் வேகமாய்ப் போகக் கூடாதா?" என்று தோன்றியது.

பிறகு, அந்த ஒற்றர் தலைவனின் கம்பீரத் தோற்றமும் அவன் மனக் கண்முன் அடிக்கடி வந்தது. அவன் தனக்குச் செய்த உதவியை நினைத்த போது அளவில்லாத நன்றி உணர்ச்சி கொண்டான். இடையிடையே ஒரு சந்தேகமும் உதித்தது. அவ்வளவு அறிவுக் கூர்மையுடைய ஒற்றர் தலைவன் தன்னுடைய இரகசியத்தை மட்டும் கண்டுபிடிக்காமலிருந்திருப்பானா? ஏதோ ஒரு பெரிய சூழ்ச்சியில் தன்னை அகப்படுத்துவதற்காக இப்படி குதிரையைக் கொடுத்து அனுப்பியிருக்கிறானோ?

பின்னும், ஒற்றர் தலைவன் கூறிய நரசிம்ம சக்கரவர்த்தியின் இளம்பிராயத்துக் காதற் கதை அவனுக்கு அடிக்கடி நினைவு வந்தது. காட்டின் மத்தியில் இருந்த சிற்பியின் வீட்டில், சிவகாமி நடனமாடுவதும், அதைப் பார்த்துப் பார்த்துச் சிற்பி சிலை அமைப்பதும், இதையெல்லாம் நரசிம்ம வர்மர் பார்த்துக் களித்துக் கொண்டிருப்பதுமான மானஸீகக் காட்சியில் அவன் அடிக்கடி தன்னை மறந்தான்.

இவ்வளவுக்கும் நடுவில், பல்லக்கில் இருந்தபடி தன்னை ஆர்வம் ததும்பிய பெரிய கண்களால் விழுங்கி விடுபவள் போல் பார்த்த பெண்ணின் பொன்னொளிர் முகமும் அவன் மனக்கண் முன் அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது. அவ்வளவு அழகு ததும்பும் முகத்தையுடையவளின் நெஞ்சில் வஞ்சனை இருக்க முடியுமா? -

## அருள்வாக்கு

கிளைகள், இலைகள் எல்லாம் அடர்ந்து இருக்கும் ஒரு மரத்தடியில் உட்கார்ந்தால் கீழே கொஞ்சம் கூட வெயில் படாமல் நிழல் இருக்கிறது. காற்று அடிக்கும் போது, இலைகள், கிளைகள் நகர்ந்து விலகுகிற சமயத்தில் சூரியனுடைய வெயில் கீழே அந்த இடைவெளி அளவுக்கு விழுகிறது, அப்புறம் மறுபடியும் அது மறைந்து விடுகிறது. அந்த மாதிரியாகத்தான் நமக்கு ஆனந்தம் அவ்வப்போது வந்து வந்து மறைந்து போகிறது. ஆனந்தம் என்பது எங்கும் பரிபூரணமாக நிறைந்திருக்கும்படியான வஸ்து. ஆனால்



"நம்ம கட்சி ஏழெட்டு மாசமா முழுகாம இருக்கு தலைவரே!"

"என்ன சொல்ற... புரியலியே?"

"இன்னும் ரெண்டு மாசத்துல ரெண்டு கோஷ்டி பிறக்கப் போகுதுன்னு சொல்ல வந்தேன்!"

"நீ பால்ல ஓவரா தண்ணி கலக்கற!"

"எப்படிச் சொல்றீங்க?"

"நேத்து நீ ஊத்துன பால்ல நாலைஞ்சு மீன் குஞ்செல்லாம் இருந்துச்சு!"

— கொங்கணாபுரம் வே. செந்தில்





நம்முடைய கெட்ட கர்மா, மனம், புத்தி இவற்றினால் அது நம்மிடம் படாமல் மறைந்திருக்கிறது. ஒரு க்ஷணம் நாம் பண்ணியிருக்கிற புண்ணிய கர்மாக்களினாலே அவை விலகும் போது, காற்று அடித்து இலைகள் விலகும் போது சூரிய ஒளி அதன் வழியாக வருவது போல், நம்முடைய கர்மாக்கள் விலகியதால், எங்கும் பரவிய ஆனந்தத்தின் திவலை நமக்கு உண்டாகிறது. இதுவே வளர்ந்து விட்டால் பேரானந்தமாகிறது. அந்த ஆனந்த சமுத்திரத்தின் லவலேசத்தைத்தான் நாம் எப்போதாவது அடைந்தவுடன் மிகவும் ஆனந்தமாக இருக்கிறோம் என்று சொல்லிக் கொள்கிறோம். தபஸ் பண்ணிப் பண்ணி விசாரம் செய்தால் எப்போதும் ஆனந்தமயமாக இருக்கும் சமுத்திரத்திலேயே கலந்து அதாகவே இருக்கலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

ஒருநாளுமிராது. ஆனால் அவள் யார்? சக்கரவர்த்தியின் மகளா? அல்லது தோழிப் பெண்ணா?

இப்படியெல்லாம் எண்ணமிட்டுக் கொண்டும் இடையிடையே ஊர் கண்ட இடங்களில் இது சரியான வழிதானா என்று கேட்டுக் கொண்டும் விக்கிரமன் போய்க் கொண்டிருந்தான். ஒற்றர் தலைவன் கூறியபடியே குதிரை தானாகவே சரியான உறையூர்ப் பாதையில் போய்க் கொண்டிருந்தது. அவனுக்கு மிகுந்த வியப்புடன் மகிழ்ச்சியும் அளித்தது. இதனால் ஒற்றர் தலைவனிடம் அவனுடைய நம்பிக்கையும் மரியாதையும் அதிகமாயின. அவன் கண்டிப்பாகச் சொல்லியிருப்பதை நினைத்து, இரவிலே பிரயாணம் செய்யக் கூடாதென்றும், இருட்டுகிற சமயத்தில் ஏதேனும் ஒரு கிராமத்துச் சத்திரத்தில் தங்க வேண்டுமென்றும் எண்ணிக் கொண்டே சென்றான். ஆனால் சூரியன் அஸ்தமிப்பதற்குக் கொஞ்ச நேரம் முன்னதாகவே அவனுடைய பிரயாணத்துக்கு ஒரு பெரிய தடங்கல் ஏற்பட்டு விட்டது.

திடீரென்று கிழக்கே வானம் கருத்தது. கருமேகங்கள் குமுறிக் கொண்டு மேலே வந்தன. குளிர்ந்த காற்று புழுதியை அள்ளி வீசிக் கொண்டு அடித்தது. தூரத்தில் மழை பெய்து தரை நனைந்ததினால் கிளம்பிய மணம் பரவி வந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் மழையே வந்து விட்டது. அற்பசொற்பமாக வரவில்லை; இடியும் மின்னலுமாய் நாலு புறமும் இருண்டு கொண்டு வந்து 'சோ' என்று சோனா மாரியாகப் பொழிந்தது. வானம் திடீரென்று பொத்துக் கொண்டு வெகுநாள் தேக்கி வைத்திருந்த ஜலத்தையெல்லாம் தொபதொபவென்று பூமியில் கொட்டுவது போலிருந்தது.

சொட்ட நனைந்து குளிரால் நடுங்கிய விக்கிரமன் ஒரு மரத்தடியில் சற்று நேரம் ஒதுங்கி நின்று பார்த்தான். மழை நிற்கும் வழியாயில்லை. நேரமாக ஆக இரவு நெருங்கிக் கொண்டிருந்தது. இந்தக் கன மழையோடு இரவின் அந்தகாரம் சேர்ந்து விட்டால் கேட்க வேண்டியதில்லை. எனவே எப்படியாவது மேலே போக வேண்டியது தான் என்றும் கிராமம் அல்லது கோவில் ஏதாவது தென்பட்டதும் அங்கே தங்கி விடலாமென்றும் எண்ணி விக்கிரமன் குதிரையை மேலே செலுத்தினான்.

சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு காட்டாறு குறுக்கிட்டது. பார்க்கும் போது தண்ணீர் முழங்காலளவுதான் இருக்குமென்று தோன்றியது. காட்டாற்றில் மளமளவென்று வெள்ளம் பெருகி விடுமாதலால் சீக்கிரம் அதைத் தாண்டி விடுவதே நல்லது என்று நினைத்து விக்கிரமன் குதிரையை ஆற்றில் இறக்கினான். கொஞ்ச தூரம் போனதும், பிரவாகத்தின் வேகம் அதிகரித்தது. குதிரை வெள்ளத்தின் குறுக்கே போக முடியாமல் நீரோட்டத்துடன் போகத் தொடங்கியது. பிரவாகமோ நிமிஷத்துக்கு நிமிஷம் பெருகிக் கொண்டிருந்தது. முன்னால் போகலாமா பின்னால் திரும்பிக் கரையேறி விடலாமா என்று விக்கிரமன் சிந்தித்துக் கொண்டிருக்கையிலேயே, குதிரை பிரவாகத்தில் நீந்த வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. இனி குதிரை மேல் இருந்தால் தனக்கும் ஆபத்து, குதிரைக்கும் ஆபத்து என்று எண்ணமிட்டவனாய் விக்கிரமன் வெள்ளத்தில் பாய்ந்தான்.

(தொடரும்)

# இதுவொரு வயசு...

ரிஷபன்

முத்து நடக்க ஆரம்பித்தாள். வேலு பின் தொடர்வது புரிந்தது. இன்று தீர்மானித்து விட்டான். படபடப்பு அதிகரிக்க கடை வீதியைக் கடந்து திரும்பினாள்.

பஞ்சக்கரங்களுக்கு இடையே கரும்பு நசுக்கப்பட்டு சாறு இறங்கி பாத்திரத்தில் வழிந்து கொண்டிருந்தது.

முத்துவுக்கு கை பம்பரமாகச் சுழன்றது. குடித்து வைத்த கிளாஸ்களைக் கழுவுவதும் கேட்பவர்களுக்கு ஜக்கிலிருந்து ஊற்றுவதுமாக வேலையில் ஆழ்ந்திருந்தான்.

மாணிக்கம் கல்லாவைவிட்டு நகருவதில்லை. பணத்தை வாங்கிக் கொண்டு கூப்பன் கிழித்துத் தருவதோடு சரி. என்ன இருந்தாலும் கடை முதலாளி.

வேலு. பனியனோடு நின்று கொண்டு கரும்புகளைத் திணிப்பதும், ஐஸ் பார் கரைந்ததும் வேறு வைப்பதும் அவன் வேலைகள்.

- இடையே முத்துவை வம்பிழுப்பதும்.

"அதென்ன முத்துன்னு ஆம்பளை பேரு. போதாதற்கு இடதுகைப் பழக்கம்..?" என்றான் வேலைக்கு வந்த முதல் நாளே.

முத்து பதில் பேசவில்லை.

முதல் மாத சம்பளத்தை அவன்தான் மாணிக்கத்திடம் வாங்கி வைத்திருந்தான். ரூபாய் நோட்டை எட்டாக, பதினாறாக மடித்து நீட்டினான்.

எதுவும் சொல்ல முடியவில்லை.

கரும்பு வைத்து எடுக்கிற சாக்கில் மேலே உரசிப் போவான். இவன் முறைப்பதை லட்சியம் செய்ய மாட்டான்.

இடையில் மாணிக்கம் சாப்பாட்டிற்கு வீட்டுக்குச் சென்றுவிடும் நேரங்களில் வேலுவின் ராஜ்ஜியம்தான்.

"போ. டீ வாங்கியா."

"எதுக்கு?"

"நான் குடிக்கத்தான். ஸ்பெஷல் டீன்னு கேளு..."

வந்த புதிதில் முத்துவுக்கு இது வியப்பாக இருந்தது. அவனவன் வெயிலில் விறுவிறுத்து உள்ளே வந்து 'ஜில்லுன்னு ரெண்டு ஜூஸ் குடுப்பா' என்று ஆர்டர் செய்ய, மாணிக்கமோ, வேலுவோ ஜூஸை ஒரு சொட்டுக் கூட சிந்துவதில்லை.

'போ... டீ வாங்கியா!'தான்.

"என்ன முழிக்கிறே. கரும்புச்சாறு குடிக்காம டீக்கு அலையறோம்னா? இந்த ஜூஸை மனுஷன் குடிப்பானா? ஹெஹ்ஹே!" என்று வேலு ஒரு தடவை பெரிதாகச் சிரித்தான்.

மாதம் நூற்றைம்பது ரூபாய் என்பது முத்துவைப் பொறுத்தவரை மிகப் பெரிய தொகை. என்னென்னவோ செய்யலாம். இழக்க விரும்பவில்லை.

இதைப் புரிந்து வைத்திருப்பதாலோ என்னவோ சமீபமாய் வேலுவின் எல்லைகள் விஸ்தீரணம் அடைந்தன. குறிப்பாய் மாணிக்கம் இல்லாத நேரங்கள்.

"ஐஸ் கட்டியை எடுத்திட்டு... ஃபுல் ஜூஸா குடிக்கிறியா?"

"வேணாம்."

"அட... சும்மா குடிப்பியா..."

"வேணாம்."

"சரி. ஜூஸ் வேணாம். என்னோட சினிமாவுக்கு வரியா... ரஜினி படம்..."

"வரலே."

"அட.. என்ன புள்ளே. எதுலயும் ஆசை இல்லாம..."

முத்து மௌனமாய்க் கண்ணாடித் தம்ளர்களைக் கழுவி கவிழ்த்து வைத்தான்.



"உனக்கு என்ன வயசு இருக்கும்?"

இந்தக் கேள்வி இவனுக்கு அனாவசியம் என்பது போல வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பக்கத்தில் வெப்ப மூச்சு பட்டது. திடுக்கிட்டுத் திரும்பினால் மிக அருகே நின்றிருந்தான்.

"உனக்கு எதுவுமே புரியாதா... இல்லே நடிக்கிறியா?"

முத்து சட்டென்று பலகையை உயர்த்தி வெளியே வந்து நின்றாள். அதே நேரம் யாரோ சாறு அருந்த வரவும் வேலு அவனிடத்திற்கு நகர்ந்து போய் விட்டான்.

முத்துவிற்கு கண் ஓரத்தில் நீர் கட்டிக் கொண்டது. கண்ணாடி போல மின்னியது.

வேலு இனி சும்மா இருக்க மாட்டான். அடுத்த சந்தர்ப்பத்திற்குக் காத்திருப்பான். ஒவ்வொரு முறையும் பயந்து செத்து... ச்சே... இது என்ன பிழைப்பு என்று தோன்றியது.

மாணிக்கத்திடம் புகார் சொல்ல தைரியம் வரவில்லை. மாணிக்கம் வேலுவிற்கு வேறு அந்தரங்க வேலைகள் கொடுப்பதைக் கவனித்திருந்தாள். எந்த இரு ஆடவரும் ஒத்துப் போய் விடுவார்கள். அதுவும் இந்த விஷயம் அவர்கள் பார்வையில் மதிப்பு இல்லாதது. 'அப்படி என்ன இழக்கப் போகிறாய்?' என்று கேட்பார்கள்.

கடை மூடும்போது மணி எட்டரை. மாணிக்கம் கடை வாசலில் நின்றான். வேலு கொடுத்த சாவிக் கொத்தை வாங்கிக் கொண்டு தன் பங்கிற்கு பூட்டை இழுத்துப் பார்த்துத் திருப்தியானான்.

மொபெட் கிளம்பிப் போனது.

வேலு அவனைப் பார்ப்பது புரிந்தது.

நீண்ட நடை இருக்கிறது. கடை வீதி மிக நெரிசல். கூட வரப் போவதாக நிச்சயம் திட்டம் வைத்திருக்கிறான். கடை வீதியில் வம்பு செய்ய மாட்டான்.

பிறகு அவள் குடிசைக்குத் திரும்பும் வழி அத்தனை பாதுகாப்பு இல்லாதது. அதுவரை வந்து விட்டால்...

முத்து நடக்க ஆரம்பித்தாள். வேலு பின் தொடர்வது புரிந்தது. இன்று தீர்மானித்து விட்டான். படபடப்பு அதிகரிக்க கடை வீதியைக் கடந்து திரும்பினாள்.

வேலு அவளைப் பெயர் சொல்லி அழைப்பது கேட்டது.

"முத்து!"

"முத்து...!"

இன்னொரு குரலும். அவள் அப்பா, எதிரே நின்றார். வயசாளி. அழுதாள்.

"என்னம்மா?"

"நான் சொன்னேன்ல. அவன்தான்..."

வேலு இந்த எதிர்பாராத நிகழ்ச்சிக்குத் தயாரில்லை. திகைத்து நின்றான்.

"தம்பி.. நீதான் வேலுவா?"

"ஆமா."

"எம்பொண்ணுதான். தாயில்லாதவ. இவ ஒருத்திக்காவத்தான் உகரைக் கையில புடிச்சுக்கிட்டுக் காத்திருக்கேன். உன்னைப் பார்த்தா... நல்ல மாதிரி... இவ மேல பிரியம் உள்ளவன் மாதிரி தெரியுது. நீயே இவளைக் கட்டிக்க. உங்க வீட்டுக்கு நானே வரேன். சம்பந்தம் பேசறேன். என் பொறுப்பும் தீர்ந்துரும். என்ன சொல்றே?"

எளிமையாய் நிதானமாய்ப் பேசினார். வேலுவிற்கு வியர்த்தது. இரைச்சல் இல்லை. மிரட்டல் இல்லை. நேரடியாய் ஒரு வேண்டுகோள்.

"நான்... யோசிச்சு... சொல்றேன்..."

"சரிப்பா... நல்ல பதிலாச் சொல்லு. போயிட்டு வரியா? நீ வாம்மா."

அதே நிதானத்துடன் முத்துவை அழைத்துக் கொண்டு நடந்தார்.

தன் பிரச்னைக்கு ஒரு நல்ல தீர்வு கிடைத்து விட்ட மாதிரி தோன்றியது முத்துவுக்கு.

## சொன்னது ஒன்று; செய்தது ஒன்று!

**வி**பத்து நடந்த இடத்துக்குத் தாம் விரைந்து, நிவாரணப் பணிகளைக் கவனிக்க வேண்டியது அவசியமென்று கூறி, இரயில்வே அமைச்சர் ஜாபர் ஷெரீஃப் தமது இலாகாவின் நிதியிலிருந்து 16 கோடி ரூபாய் செலவழித்து இருபது பேர் அமரக் கூடிய தனி விமானத்தை வாங்கியுள்ளார். சில நாட்களில் மொராதாபாத்தில் ஒரு விபத்து நிகழ்ந்தது. ஆனால் அமைச்சர் அங்கு செல்லாமல் தம் சொந்த ஊரான பெங்களூருக்குத்தான் அவ்விமானத்தில் பயணம் செய்தார்.



"இந்தியன் எக்ஸ்பிரஸ்"
தகவல் : அ. ஷண்முகசுந்தரம்

"பேரணியை மேற்பார்வையிடுறப்ப தலைவர் டல்லா இருக்காரே, ஏன்?"

"இவ்வளவு கூட்டத்துக்கும் எப்படிக் கூலி கொடுக்கறதுங்கற கவலைதான்!"

- அம்பை தேவா



# மௌனிக்கொடி

**ஜோதிர்லதா கிரிஜா**

**கொ**ஞ்சம் கொச்சையான தமிழில் இருந்த அந்தக் கடிதம் தெரிவித்த செய்தியை நரேந்திரநாத் பானர்ஜியால் செரிக்க முடியவில்லை. 'பவித்ரா புரட்சிக்காரங்களோட நடந்த சண்டையில செத்துப் போயிடிச்சு. அவங்க வீட்டுக்குத் தகவல் போச்சா இல்லியான்னு எனக்குத் தெரியாது. நான் அதோட துணைக்கு இங்க வந்தேன். நானும் மாட்டிக்கிட்டு இப்ப பிரசிடென்சி ஜெயில்ல இருக்கேன். நமக்கெல்லாம் எப்ப விடுதலையோ தெரியல்ல. கூடிய சீக்கிரம் காந்தி சிறைக்கு வந்து நம்மோட பேசப் போறாருன்னு தெரியுது. அவரு சொல்ற வழிதான் நல்லதுன்னு என் கண்ணு பவித்ராவைப் பறிகுடுத்ததுக்குப் பெறகுதான் தெரியுது. எனக்கே இப்படி இருக்குதே, பெத்த உங்களுக்கு எப்படி இருக்கும்?' - தங்கம் அந்த அதிர்ச்சியான சேதியைத் தனக்குச் சொல்லாமலே இருந்திருக்கலாம் என்று நரேந்திரநாத் பானர்ஜிக்குத் தோன்றியது.

முந்தைய வாரந்தான் அமராவதியிடமிருந்து அவனது கடிதத்துக்குப் பதில் வந்திருந்தது. பவித்ரா கல்கத்தாவில் - அல்லது வேறு இடத்தில் அவனைப் போன்றே சிறைப்பட்டிருக்கக்கூடும் என்று அவள் எழுதி இருந்தாள். 'அவளுக்கு விஷயமே தெரியாதா, இல்லாவிடில் எனக்குத் தெரியவிடாமல் மறைக்கிறாளா?' கல்கத்தாவுக்குப் புறப்பட்டு வந்து ஜெயிலில் அவனை ஒரு முறையேனும் பார்க்க விரும்புவதாய் அவள் எழுதி இருந்தாள். தீவிரவாதிகளுக்குப் பார்வையாளரோடு சந்திப்பு அனுமதிக்கப்படுவதில்லை என்று அவன் அவளுக்கு எழுதிப் போட்டான்.

தங்கத்திடமிருந்து வந்த கடிதத்தின் வாசகம் - பவித்ரா புரட்சிக்காரங்களோட நடந்த சண்டையில செத்துப் போயிடிச்சு... - திரும்பத் திரும்ப அவன் மண்டையைப் பிளந்து விடுகிறாற்போல் காதுகளுள் சுற்றிச் சுற்றி ஒலித்தது. அன்று சென்னையில் கப்பலுக்குள் கங்காதரனோடு சிரித்துப் பேசிக் கொண்டு நின்ற பவித்ரா அவன் கண்களுக்குள் திரும்பத் திரும்ப வந்தான். அவனது சதைகள் அதிர்ந்தன. கண்ணீர் திமிறிப் புறப்பட்டுத் துளித் துளியாய் உதிர்ந்தது.

**ஏ**ப்ரல் மாதம் பதினொன்றாந் தேதியன்று காந்தியடிகள் டம்டம் சிறைச்சாலைக்கு வருகை தந்து கைதிகளின் கூட்டத்தில் பேசினார். அந்தச் செப்பு நிற உடம்பிலும், பொக்கை வாய்ச் சிரிப்பிலும் நரேந்திரநாத் பானர்ஜி உள்ளம் பறிகொடுத்தான்.

'பயங்கரவாதத்தால் எந்தப் பயனும் இல்லை. நமக்கும் நாம் எதிர்த்த எதிரிகளுக்குமிடையே நிரந்தரமான மனக்கசப்பு மட்டுமே அதனால் மிஞ்சும். நான் சொல்லுகிற வழியில் வெற்றி காண்பதில் தாமதம் ஏற்படலாம். ஆனால் அந்த வெற்றி நிலையானது. எதிரியையும் வெற்றி கொண்டு நண்பனாக்கி நாளைக்கு நமக்கே அவனை உதவ வைப்பது. பலாத்காரத்தால் விளையும் நிரந்தரப் பகை என்பது இதில் அறவே இல்லை. உயர்ந்த இலக்குகளையடையும் வழியும் உயர்ந்ததாக இருப்பதில்தான் மனிதனின் சிறப்பு இருக்க முடியும். கெட்டவர்களின் மனத்தை அன்பால் கவர முயல வேண்டும்....'

ஒரு கைதி குறுக்கிட்டுக் கேள்வி கேட்டான் : 'கீதையில் கிருஷ்ண பரமாத்மா வேறு மாதிரியாகச் சொல்லுகிறாரே? நியாயத்தை நிலைநாட்ட உறவினர்கள், ஆசிரியர்களையெல்லாம் கூட அடித்து நொறுக்கலாம், தப்பில்லை என்கிறாரே?''

''அவர் கிருஷ்ணர், பரமாத்மா என்று நீங்களே சொல்லி விட்டீர்களே. அவர் வேறு மாதிரிதான் சொல்லுவார்.''

''அவர் பரமாத்மா. நீங்கள் மகாத்மா.''

கைதிகள் சிரித்தார்கள். ஆனால் காந்தியடிகளுக்குச் சிரிப்பு வரவில்லை.

''நான் வெறும் துராத்மா. எனக்கு தெரியாத்தனமாக மகாத்மா என்று பட்டம் கொடுத்து விட்டார்கள். நான் ஒரு சாதாரண ஆள். மகாத்மா என்று நீங்கள் அடைமொழி இட்டு அழைப்பதை நான் விரும்பியதே இல்லை. ஏனெனில் அது உங்களுக்கும் எனக்குமிடையே ஒரு பெரிய இடைவெளியை உண்டாக்கி விடுகிறது. நான் ஏதேனும் செய்யச் சொன்னால், 'அய்யா, எங்க

னால் முடியாது. உங்களால் முடிகிறதென்றால் அதற்குக் காரணம் நீங்கள் மகாத்மா, நாங்களோ சாதாரணமானவர்கள் என்று கூறித் தப்பித்துக் கொள்ளப் பார்க்காதீர்கள். என்னால் எது முடியுமோ - செய்ய முடிந்திருக்கிறதோ - அதை மட்டுமே உங்களையும் செய்யச் சொல்லி நான் கெஞ்சுகிறேன் என்பதை மறவாதீர்கள். கூடிய விரைவில் உங்களையெல்லாம் விடுவித்து விடச் சொல்லி வைசிராயிடம் கேட்டிருக்கிறேன். விடுதலையாகி வெளியே வந்ததும் பழைய பயங்கரவாதப் பாதையில் போகாமல் எங்கள் சத்தியாக்கிரகத்தில் கலந்து இந்தியாவின் விடுதலைக்காகப் போராடுவீர்கள் என்று நம்புகிறேன்..."

காந்தியடிகளின் கனிவான, உணர்ச்சிமயமான பேச்சால் பெரிதும் பாதிக்கப்பட்ட ஒரு புரட்சியாளன், "மகாத்மாஜி! என்னைப் பொறுத்தவரையில் இனி வன்முறை என்ற சொல்லுக்கே என் வாழ்க்கையில் இடமில்லை இது சத்தியம்" என்று முகத்து நரம்புகள் புடைக்க, ஆவேசத்துடன் அங்கிருந்த மேசை மீது ஓங்கித் தட்டினான்.

"உன்னுடைய இந்த முடிவை - வன்முறையைக் கைவிட்டு விட்டதான அறிவிப்பை - இவ்வளவு வன்முறையோடு மேசை மீது ஓங்கி அடித்துத்தான் சொல்ல வேண்டுமா?" என்று காந்தியடிகள் வினவ, அங்கே சிரிப்பொலி கிளம்பியது.

நரேந்திரநாத் பானர்ஜியின் செவிகளில் காந்தியடிகளின் சுருக்கமான ஆனால் அழுத்தம் திருத்தமான - பேச்சு வெகு நேரம் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

## 61

**போ**லந்தின் மீது ஜெர்மனி படை எடுத்ததும், போலந்தின் நேச நாடுகளான பிரிட்டனும் பிரான்சும் ஜெர்மனிக்கு எதிராய்ப் போர் முழக்கம் செய்தன. முதலில் நடுநிலைமை வகித்த இத்தாலியும் ஜப்பானும் போரில் ஜெர்மனியின் பக்கம் சேர்ந்தன.

காங்கிரசின் அதிகாரபூர்வமான அறிக்கை, 'யாரைக் கேட்டு நீ இந்தியாவை இந்தப் போரில் ஈடுபடுத்தினாய்? நாங்கள் ஜெர்மனி, இத்தாலி நாடுகளை ஆதரிக்கவில்லை. ஆனால் உன்னையும் எங்களால் ஆதரிக்க முடியாது' என்ற ரீதியில் சொல்லமைப்பைக் கொண்டிருந்தது. இந்தியாவின் சம்மதம் இல்லாமல் இந்தியாவைப் போரில் ஈடுபடுத்த முற்பட்ட பிரிட்டனின் அதிகப் பிரசங்கித்தனத்தைக் கண்டிக்கும் வகையில் அது இருந்தது.

அதுமட்டுமின்றி, இந்திய சுதந்திரம் பற்றிய உத்தரவாதம் தரப்பட வேண்டும் என்பதையும் அது திட்டவட்டமாக அறிவித்தது.

இதற்கிடையே ஜனாப் ஜின்னாவும் தமது பங்குக்கு ஓர் அறிக்கை வெளியிட்டார். முஸ்லிம்கள் பெரும்பான்மையில் வாழும் பகுதிகளைப் 'பாகிஸ்தான்' எனும் பெயரால் பிரிக்க வேண்டுமென்பதே அது!

**ல**ண்டனில் 1940 மார்ச்சு மாதம் இங்கிலாந்தைக் குலுக்கிய ஒரு நிகழ்ச்சி நடந்தது. 1919- ஆம் ஆண்டில் இந்தியாவில், பஞ்சாபில் ஜாலியன்வாலாபாக் படுகொலைக்குக் காரணமாக இருந்த பஞ்சாபின் கவர்னர் மைக்கேல் ஓட்வெர் என்னும் வெள்ளைக்காரரை - இங்கிலாந்தில் இப்போது ஓர் அரசியல்



பிரமுகராக இருந்தவரை - அப்படுகொலையைக் கண்ணால் பார்த்துப் பழிவாங்கும் சபதத்தைத் தன் பன்னிரெண்டாம் வயதில் செய்திருந்த - உதாம் சிங், காக்ஸ்டன் ஹால் எனுமிடத்தில் அவர் சொற்பொழிவாற்றி விட்டு அமர்ந்ததும் ஒரே குண்டால் சுட்டு வீழ்த்தி விட்டான். ஜெனரல் டையர் எப்போதோ செத்து விட்டிருந்தான். சுட்டுக் கொன்றதும் உதாம்சிங் தப்பி ஓட முயலவே இல்லை. ஜாலியன்வாலாபாக் படுகொலைக்கு அங்கீகாரம் அளித்துப் படையனுப்பிய மைக்கேல் ஓட்வெரைக் கொன்றது குறித்துத் தான் மகிழ்ச்சியடைவதாக அவன் அறிவித்தான். பத்து ஆண்டுகளுக்கு முன்னால் தூக்கிலிடப்பட்ட தன் நண்பன் பகத்சிங்கைச் சந்திக்கவே தான் போவதாகத் தூக்கிலிடப்படுமுன் அவன் அறிவித்தான். 'என் பெயர் உதாம்சிங் இல்லை. என் பெயர் ராம் முகம்மது சிங் ஆஜாத் என்பதாகும்" என்று - இந்தியாவின் முக்கியமான மதங்களின் ஒற்றுமையைக் குறிக்கும் வண்ணமாக - தனது பெயரை அவன் சொன்னான். ஆயினும் காந்தியடிகள் அக் கொலையைக் கண்டித்தார்.

அதே ஆண்டு மே மாதம் சர் வின்ஸ்டன் சர்ச்சில் இங்கிலாந்தின் பிரதம மந்திரியானார். 'ஓர் அரை நிர்வாணப் பக்கிரி, சரிக்குச் சரியாக இங்கிலாந்தில் இந்திய வைசிராயுடன் அமர்ந்து உரையாடுவது பற்றிய கற்பனை கூட எனக்குச் சகிக்கவில்லை' என்று அன்றொரு நாள் கூறிய அதே வின்ஸ்டன் சர்ச்சில்!

அவ்வாண்டின் ஜூலை மாதத்தில் இங்கிலாந்துக்கு எதிரான அறைகூவல்களுக்காக சுபாஷ் சந்திரபோஸ் சிறையில் வைக்கப்பட்டார்.

**க**ங்கா அடிக்கடி ராஜாராமனின் வீட்டுக்குப் போய் வந்து கொண்டிருந்தது வெறும் அரசியல் கருத்துப் பரிமாறல்களுக்காக மட்டும் இல்லை என்பது ராமசாமிக்குப் புரிந்தது. ராஜாராமனின் வீட்டாரும் பவித்திராவின் ஞாபகமே அவன் கால்களைத் தம் வீடு நோக்கி இழுக்கிறதென்றதைப் புரிந்து கொண்டிருந்தனர். 'பவித்ராவுக்கு என்னதான் நேர்ந்திருக்கும்? பல நாட்களாகக் கடிதம் கூட இல்லையே? சிறைப்பட்டிருப்பாளா, அல்லது...' என்று அதற்கு மேல் கற்பனை செய்து பார்க்க முடியாமல் அஞ்சனாவும் அமராவதியும் அவன் தங்கள் வீட்டுக்கு வந்தபோதெல்லாம் அதிகமாய்ப் பவித்திராவின் ஞாபகத்தில் உழல, உண்மையை அறிந்து உள்ளூர அழுது மாய்ந்து கொண்டிருந்த ராஜாராமனோ அவன் முகத்தைப் பார்க்க நேர்ந்த போதெல்லாம் தாங்க முடியாத வேதனைக்கு ஆட்பட்டார். 'இந்தப் பிள்ளை இவ்வளவு நம்பிக்கையோடு வந்து போய்க் கொண்டிருக்கிறதே? உண்மையை இவனுக்கு மட்டும் சொல்லி விட்டால்தான் என்ன? கலியாண வயசை இவன் ரொம்பவும் தாண்டி விட்டானே... பவித்ரா இல்லை என்பது தெரிந்தால் ஒருவேளை அவன் வேறு ஒருத்தியை மணக்க சம்மதிக்கக்கூடும்' என்ற எண்ணம் அவருக்கு வந்து போனாலும், அவனை நேரில் பார்த்ததும் அவருக்கு வாய் அடைத்துப் போயிற்று.

ஒருநாள் தம்மைத் திடப்படுத்திக் கொண்ட ராஜாராமன், அமராவதி, அஞ்சனா ஆகியோரின் முன்னிலையிலேயே, அவனது திருமணப் பேச்சை எடுத்து விட்டார்.

"கங்கா, உங்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்... பவித்ரா எப்ப வருவாளோ என்ன சங்கதியோ? அவகிட்டேருந்து லெட்டரே வர்றதில்லே. நிச்சயமா உங்களோட இயக்கம் சம்பந்தப்பட்ட பெரிய குத்தம் எதையோ பண்ணிட்டு அவ பத்து வருஷம், பதினாலு வருஷம்னு நரேந்திரநாத் மாதிரி தண்டனையடைஞ்சிருக்கணும்னுதான் எனக்குத் தோன்

"தலைவருக்குப் பிராணிகள் மேலே அளவு கடந்த பிரியம்!"

"அதுக்காக, மேடைக்குப் பக்கத்துல நாய் நிற்பதைப் பார்த்துட்டு நாய்மார்களே'ன்னு சேர்த்துச் சொல்றது கொஞ்சம்கூட நல்லா இல்லே!"

- எஸ். முகம்மது யூசுப்





ஒருவர் : உங்க படைப்புகளில் எனக்கு மிகவும் பிடித்தது...

எழுத்தாளர் : சொல்லுங்க, சொல்லுங்க...!

ஒருவர் : உங்கள் பெண் மல்லிகாதான்.

- சீர்காழி வி. கௌரி

றது. அதான் ஒரு தகவலும் இல்லே. அதனாலே நீ என்ன பண்றே..." - ராஜாராமனுக்கு இந்த இடத்தில் குரல் நடுங்கியது.

"என்ன பண்ணனும்கறேள், மாமா?"

"சீக்கிரமா, ஒரு நல்ல பொண்ணாப் பாத்து, சட்டுப்புட்டுனு கல்யாணம் பண்ணிக்கிறே."

கங்கா சிரித்தான். "எனக்குத் தெரிஞ்ச ஒரே நல்ல பொண்ணு பவித்ராதான், மாமா. காத்திண்டிருந்து கல்யாணம் பண்ணிக்குங்கோன்னு நீங்கதானே அன்னிக்குச் சொன்னேள்? இப்ப என்ன திடீர்னு?"

"அப்ப சொன்னேந்தாம்ப்பா. நான் இல்லேங்கலே. ஆனா இவ்வளவு நாள் இழுத்தடிக்கும்னு நான் நெனைக்கல்லேப்பா. அதனால சொல்றேன். எத்தனை வருஷம் ஆச்சு! அவ இருக்கிற இடம் கூடத் தெரியல்ல. அதுக்குத்தாம்ப்பா சொல்றேன்..." - மேலே பேச முடியாமல், பவித்திரா பற்றிய கடித வாசகம் காதில் ஒலிக்க, ராஜாராமன் கண்ணீர் விடத் தொடங்கினார்.

அஞ்சனாவுக்கும் அமராவதிக்கும் கூட அழுகை வரும் போல் ஆயிற்று.

"இந்தப் பேச்சை இனிமே நீங்க எடுக்கக் கூடாது, மாமா. எம் மனசுல பவித்ராவைத் தவிர வேறு யாருக்குமே இடமில்லே."

'எம் மனசுல குஞ்சம்மாவைத் தவிர வேற யாருக்குமே இடமில்லே' என்று வெகுநாள் முன்பு தம்மிடம் ராமசாமி கூறிய சொற்கள் அவர் செவிகளில் ஒலித்தன. 'ஏகபத்தினி வம்சம் போல இருக்கு' என்று கசப்புடன் நினைத்துப் புன்சிரிப்புக் கொண்டார். கங்காவை நினைத்த போது பெருமையாகவும் இருந்தது; வருத்தமாகவும் இருந்தது. தன் பேத்தி தேர்ந்தெடுத்த பிள்ளை இவ்வளவு உண்மையுள்ளவனாக இருக்கிறானே என்ற பெருமிதத்தில் அவருக்கு மறுபடியும் கண்கள் கலங்கின.

"வருத்தப்படாதேங்கோ, மாமா. திடீர்னு ஒருநாள் நம்ம எல்லார் முன்னாலயும் - நான் எங்காத்துல வந்து நின்ன மாதிரி - தங்கமும் அவளுமா வந்து நிப்பா பாருங்கோ."

ராஜாராமனுக்கு அதற்கு மேல் எதுவும் பேச முடியாதபடி தொண்டை அடைத்துக் கொண்டது.

சிறை வைக்கப்பட்ட சுபாஷ் சந்திர போஸ், உண்ணாவிரதமிருந்து உடல் மோசமாகவே விடுவிக்கப்பட்டார். ஆனால் வீட்டுக் காவலில் வைக்கப்பட்டார். வீட்டைச் சுற்றிலும் இருபத்து நான்கு மணி நேரமும் போலீசார் கண்காணித்துக் கொண்டிருந்த நிலையில் அவர்களுக்குச் சுடுக்காய் கொடுத்து விட்டு 1941 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 17-ஆம் நாளன்று அங்கிருந்து வெளியேறித்



"சார்... போஸ்ட்..."

"இதோ பாருப்பா... இங்கே நான்தான் எல்லாம்... அதனாலே இனிமே "மேடம் போஸ்ட்"னு சொல்லித்தான் போடணும்...!"

- கவிட். ரவி

தப்பினார் - ஒரு முஸ்லிமைப் போல் வேடமணிந்து! கோமோ எனுமிடத்துக்குக் காரில் போய், அங்கிருந்து ரெயில் வண்டியில் பெஷாவர் போய், அங்கிருந்து சில ஊர்கள் வழியாக இந்திய எல்லையைக் கடந்து ஜலாலாபாத் வழியாகக் கால்நடையாகவும், குதிரை வண்டியிலும் பின்னர் மோட்டார் அல்லது லாரியிலும் சமயம் போல் பயணித்துக் காபூலைச் சென்றடைந்தார் என்ற உண்மை பின்னர் வெளியாகியது. காபூலிலிருந்து இத்தாலிய பாஸ்போர்ட்டுடன் அவர் ரஷ்யாவை அடைந்தார். 1941, மார்ச்சு 28-இல் மாஸ்கோவிலிருந்து சுபாஷ்சந்திர போஸ் ஜெர்மனியின் தலைநகர் பெர்லினுக்குப் பறந்தார். இந்த விவரங்கள் சிலநாள் கழித்துத் தெரியவந்த போது மூக்கில் விரல் வைக்காதாரில்லை.

பெர்லினில், ஹிட்லரின் வலக்கை என்று சொல்லப்பட்ட ரிப்பன்ட்ராப் சுபாஷை ஆர்வத்துடன் வரவேற்றார். பெர்லின் ரேடியோவிலிருந்து சுபாஷ் பேசலாம் என்றும், ஜெர்மனியில் உள்ள இந்தியப் போர்க்கைதிகளை அவர் பயன்படுத்திப் படையமைத்துக் கொள்ளலாமென்றும் கூறி உற்சாகமளித்தார். சுபாஷ் சந்திரபோஸ் ரோம், பாரிஸ் ஆகிய நகரங்களில் 'இந்திய விடுதலைக் கேந்திரங்க'ளை ஏற்படுத்தும் பணியிலும் படை திரட்டும் வேலையிலும் முழுமூச்சுடன் முனைந்தார்.

டிசம்பர் 7-ஆம் நாளில், அமெரிக்காவுக்குச் சொந்தமான ஹவாய் தீவில் உள்ள போல் ஹார்பர் மீது ஜப்பான் விமானங்கள் குண்டுமழை பொழிந்து அமெரிக்காவின் எண்ணிறந்த கப்பல்களை மூழ்கடித்தும் நாசப்படுத்தியும் அதன் கடற்படை வலிமையைப் பெரிய அளவுக்குச் சேதப்படுத்தி விட்டன. அமெரிக்காவும் பிரிட்டனும் அடுத்த நாளே

ஜப்பானின் மீது போர் அறிக்கை விடுத்தன. 11-ஆம் நாள் ஜெர்மனியும் இத்தாலியும் அமெரிக்காவின் மீது போர்ப் பிரகடனம் செய்தன. மேலும் சில நாடுகளும் களத்தில் இருதரப்பிலும் குதிக்க, அந்தப் போர் அனைத்துலகப் போராக உருக்கொண்டு விட்டது. சுமார் இரண்டு மாதங்களில் சிங்கப்பூரும் பிறகு ரங்கூனும் ஜப்பான் வசமாகி விட்டன.

பிரிட்டனின் பிரதம மந்திரி சர் வின்ஸ்டன் சர்ச்சில், ரங்கன் விழுந்த மறுநாளே கிரிப்ஸ் மிஷன் எனும் தூதுக் குழுவை இந்தியாவுக்கு அனுப்பப் போவதாக அறிவித்தார். ஆனால் கிரிப்ஸ் மிஷன் பேச்சு வார்த்தைகள் முறிந்து விட்டன. சர்ச்சில் இம்மியும் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. 'சர்ச்சிலின் பிடிவாதம் நியாயமற்றது' என்று அமெரிக்க அதிபர் ரூஸ்வெல்ட் சுட்டிக்காட்டியும் எந்தப் பயனும் விளையவில்லை.

## 62

நரேந்திரநாத் பானர்ஜி விடுதலையாகிச் சென்னையை வந்தடைந்ததன் பின் சில மாதங்கள் கழிந்து விட்டன. அலிப்பூர்ச் சிறையில் இருந்த தங்கத்தின் தண்டனைக்காலம் முடிய இன்னும் சில மாதங்கள் இருந்ததால், அவள் இன்னும் அங்கேயே இருந்தாள்.

"என்ன யோசனை, நரேன்?" என்று கேட்டவாறு எதிரே வந்தமர்ந்து கொண்ட அஞ்சனாவை அவன் பார்த்துத் துயரத்துடன் புன்னகை செய்தான்.

"உன் பழைய சிரிப்பு போய் விட்டது, நரேன்."

"முகம் வேறு அசிங்கமாகி விட்டதல்லவா? அதுவும் ஒரு காரணமாக இருக்கலாமே."

"பாதி முகத்தைத் தழும்புகள் மறைக்கின்றன என்பது உண்மைதான். ஆனால், நான் அழகைப் பற்றிப் பேசவில்லை. உன் புன்னகையில் உயிரே இல்லாதிருப்பதைப் பற்றித்தான் சொல்லுகிறேன்."

"நான் ஒரே ஒரு தடவை மட்டுமே பார்க்கக் கொடுத்து வைத்த உயிருக்குயிரான என் ஒரே மகள் பற்றி எதுவுமே தெரியாத நிலையில் என் சிரிப்பில் எப்படி உயிர் இருக்க முடியும், அஞ்சனா?"

"நரேன், நரேன். நீங்கள் இப்படி அழலாமா? குளித்துக் கொண்டிருக்கும் அமராவதி திரும்பி வரும் நேரம்... உங்களைப் போலவே பவித்ராவும் சிறைப்பட்டிருக்கலாமல்லவா?"

"யார் கண்டது? எப்படியும் இருக்கலாம். நீண்ட சிறைவாசமென்றே வைத்துக் கொண்டாலும், ஆண்டுக்கணக்கில் அந்தப் பையன் காத்துக் கொண்டிருக்க வேண்டுமா? கலியாணத்துக்கும் ஒரு வயது இருக்கிறதல்லவா?"

"நாங்கள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாகி விட்டது, நரேன். அவள் ஒரே பிடிவாதமாக இருக்கிறாள். பவித்ரா எந்த ஊரில், எந்தச் சிறையில் இருக்கிறாள் என்பதைக் கண்டுபிடிக்கவே முடியாதா?"

"முதலில் அவள் உயிரோடுதான் இருக்கிறாளா என்பதையே கண்டுபிடிக்க முடியவில்லையே" - இவ்வாறு சொல்லிவிட்டு அவன் குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்கினான்.

குளியலறைக் கதவுத் தாழ்ப்பாள் விலக்கப்பட்ட ஓசை கேட்டதும், நரேந்திரன் தன் சிவந்த விழிகளை அவள் பார்த்துவிடக் கூடாதென்பதற்காக எழுந்து வாசற்பக்கம் போய்த் தெருவை வேடிக்கை பார்க்கிறாப்போல் நின்று கொண்டான்.

(தொடரும்)



**இரு ரவுடிகள் :**
**"உன்னோட குழந்தைக்கு நெஞ்சைத் தொடற மாதிரி பேர் வைக்கச் சொன்னியே! தலைவர் என்ன பேர் வெச்சார்?"**
**"முண்டா பனியன்!"**

**- கே. சோமசேகர்**

"இது புதுமையான பட்டிமன்றமுன்னு பேசிக்கிறாங்களே... எதனால...?"

"நாளைக்கு நடக்கப் போற பட்டிமன்றத்துக்கு யார் நடுவரா இருக்கிறதுன்னு தீர்மானிக்க இந்தப் பட்டிமன்றம் நடக்குது...!"

- எஸ். எஸ். பூங்கதிர்



MAECO

**A AGRO BASED GROUP COMPANIES**

## MAECO GROUPS

மேக்கோ பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ், (பி) லிட்.,
மேக்கோ பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்
மேக்கோ இரிகேஷன் (நவீன நுண்ணீர்ப்பாசன முறை)
மேக்கோ அக்ரோபார்ம்ஸ் (பி) லிட்., (தோட்டக்கலைப் பண்ணை நிர்வாகம்)

மத்திய அரசு நிறுவனங்கள் சட்டம் 1956 - ன் படி சட்டப்பதிவு பெற்றது.

### 1. நிரந்தர வைப்பு நிதி உங்கள் அன்பு குழந்தைக்கு

| 24% கூட்டு வட்டித் திட்டம் | | | | | |
|---|---|---|---|---|---|
| வைப்புத் தொகை | 3 1/2 வருடம் | 5 வருடம் | 15 வருடம் | 20 வருடம் | 25 வருடம் |
| 1000 | 2000 | 3000 | — | 80000 | 2,00,000 |
| 5000 | 10000 | 15000 | 1,35,000 | 4,00,000 | 12,00,000 |

### 2. மாதாந்திர வட்டித் திட்டம் 21% வைப்புத்தொகை 50,000 மாத வட்டி 875/

### 3. நிரந்தர வைப்பு நிதி

| வைப்புத் தொகை | 1ம் ஆண்டு | 2ம் ஆண்டு | 3ம் ஆண்டு | 4ம் ஆண்டு | 5ம் ஆண்டு |
|---|---|---|---|---|---|
| 5,000 | 6,200 | 7,700 | 9,500 | 11,750 | 15,000 |
| 10,000 | 12,400 | 15,400 | 19,000 | 23,500 | 30,000 |

குறைந்த பட்ச கால அளவு 1 வருடம்
குறைந்த பட்ச டெப்பாசிட் தொகை 1000/-

எங்களது மேக்கோ நிறுவனம் தொடர்ந்து ஏழு ஆண்டுகளாக நீர்ப்பாசனத் துறையில் சிறப்பாக பணியாற்றி வருகின்றது. மேலும் புதிய பண்ணை நிர்வாகமும், பண்ணை ஆலோசனை பணிகளையும் செய்து வருகின்றது.

**HEAD OFFICE**

MAECO FINANCE & INVESTMENTS (P) LTD.,
POST BAG NO.4, N.S.B. ROAD,
PERAMBALUR TK. 621 212.
TRICHY DIST. TAMIL NADU.
PH : 7328
STD. 04328
GRAMS : MAECO

MFI

**OUR AUTHORISED CONTACT ADDRESSES :**

1. Mr. M. HARIKRISHNAN 57, KALAIVANI MALIGAI, 9 MANGASH STREET, MADRAS 17. Ph : 4346404
2. Mr. T.V. CHANDRASEKAR PLOT NO. 6 PAVANDAR NAGAR, RENGAPURAM, VELLORE 9.
3. Mr. T.G. R. VIJAY NO. 125, NATIONAL LODGE, PUDUKKOTTAI.
4. Mr. M. UDAYAKUMAR ABIRAMI T.V.CENTRE, VEDARNIYAM & THIRUTHURAIPOONDI.

# பெருங் கூட்டத்தில் ஒருவன்

சிட்ல பாக்கம்–

சென்னைக்குத் தெற்கே இத்தனாவது கி.மீ.யில் அமைந்துள்ள, சாக்கடைகள் நிறைந்த புண்ணிய க்ஷேத்ரம். கணேஷுக்கு உத்தண்ட ராமனைக் கண்டுபிடித்து விட்டால் போதுமென்றிருந்தது.

"வரதராஜா தியேட்டர் தெரியுமா? அங்க போய்க் கேட்டா, ஏன் கேப்பானேன். வரத ராஜா தியேட்டர்லேருந்து நேரா கிழே போனா வலது பக்கம்-திருப்பம் வரும். அங்கேருந்து 'மூணாவது லெப்டோ, நாலாவதோ... வாசல்ல கொய்யாமரம் கூட இருக்கும்."

உத்தண்டராமனின் விலாசம் இது! உதவி ஆசிரியர் கல்யாணராமன் கொடுத்தது. சொல்வதைச் செய்வதே நிருபன் வேலை. திருப்பிக் கேட்டால், கல்யாணராமன் தமது சர்வீஸ் சலுகையைப் பயன்படுத்தி, கூடிய விரைவில், சென்னை மொழியில் 'கல்தா' கொடுத்தாலும் கொடுக்கலாம்.

வரதராஜா தியேட்டர். இங்கே ஒரு முறை பெரியப்பாவோடு இடம் பார்க்க வந்த ஞாபகம். பெரிதாய் ஏரி உண்டு. அதைத் தூர்த்து தூர்த்து வீடாக்கிக் கொண்டிருப்பதாகக் கேள்வி.

நேராகக் கிழே! என்றால் எந்த பக்கம்...?

யாரைக் கேட்பது? உத்தண்டராமன் தன் எழுத்தின் வலிமையால், குறைந்தபட்சம் சிட்லபாக்கத்தில் ஒளி பரப்பியிருக்கக் கூடாதோ! பரபரக்கும் கூட்டம். பெரும்பாலும் சைக்கிள். கொஞ்சம் டிவிஎஸ்-50. சென்னை நகருக்குள் நுழையும் ஆயத்தங்கள் அனைவர் முகத்திலும்.

"கவிஞர் பத்ரிநாராயணனைப் பத்தி உத்தண்டராமனுக்கு நல்லா தெரியும். ரெண்டு பேரும் சின்ன வயசுல திருவல்லிக் கேணி ரூம்ல ஒண்ணா இருந்தவங்க. நீங்க ஒரு பதினெட்டு இன்ச்சுக்கு மேல போகாம ஒரு இரங்கல் எழுதி வாங்கிட்டு வந்துடுங்க."

இப்போதைக்கு பத்ரி நாராயணன் செய்திப் பொருள். காலமாகிவிட்ட கவிஞர் பத்ரிநாராயணன்.

அமெரிக்கப் பல்கலைகள், கனடாவின் பல்கலைகளிலெல்லாம் வருகைதரும் பேராசிரியர். ஆறேழு கவிதைத் தொகுதிகள். தன் பிள்ளைப் பருவம், பால பருவம், காளைப் பருவம், பின்னர் தரணி புகழ் சென்னையில் ஒரு வெள்ளைக்காரன் கம்பெனியில் குப்பை கொட்டியது எல்லாம் இளம் பருவத்து நினைவுகளாய், மூன்று தொகுதிகளில் வழ வழா தாளில் எல்லோர் கைகளிலும் தவழ விட்டிருக்கிறார்.

கணேஷ் அதன் பைரேடட் எடிஷன் வைத்திருக்கிறான். பிடித்தது. ஜனரஞ்சகமான மொழி. எப்பேர்ப்பட்டவனையும் கவர்ந்துவிடும். முடித்தவுடன் வாசகன் பிரமித்துப் போய்விடுவான். அனுபவங்களைத் துளி சிந்தாமல் பகிர்ந்து கொண்டுள்ள லாகவம் அசத்தும்.

உத்தண்டராமன் இவருக்கு நேர் எதிர். யோசிக்க வைப்பார். இரண்டே தொகுதிகள் ஒன்று 40 பக்கம். மற்றொன்று 56. முதல் தொகுதி, யார் கண்ணிலும் படவேயில்லை. அதில்தான் நீக்ஷண்யமிக்க கவிதைகள் இடம் பெற்றிருப்பதாய் விமர்சகர் பெருங்கோட்டு வேலன் கூறியிருக்கிறார்.

கணேஷ் இரண்டாவது தொகுப்பைத் தான் படித்திருக்கிறான். ஒவ்வொரு கவிதையும் புத்துணர்ச்சி மிக்கது. கடைசியில் அழகாய் ஒரு சிக்கல். புது விஷயங்களை யோசிக்க வைக்கும் சிக்கல்.

மூன்றாவது லெப்டோ நான்காவது லெப்டோ தானே?

மூன்றாவது லெப்டின் முனையில் நின்றான். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் தென்னை முதுகு வளைத்துத் தெருவை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. தெருவில் செம்மண் பரப்பியிருந்தார்கள். மேலே தார் போடும் உத்தேசமிருக்கலாம்.

கொய்யாமரம் இருக்குமோ?

கொய்யாமரம் எப்படியிருக்கும்? யார் கண்டார்? சைதாப்பேட்டையிலிருந்து தி.நகர் போய்ப் படித்தவனுக்கு பஸ் தெரியும், லாரி தெரியும். கொய்யாவா தெரியும்? ஒவ்வொரு பெயர்ப் பலகையாய்ப் பார்ப்பதென்று முடிவு செய்தான்.

நான்காவது லெப்டின் முனையில் ஒரு வீட்டில் U மற்றும் Rன் பெயிண்ட் காணாமல் போக, இரண்டு TH களோடு பெயர்

தெரிந்தது. கேட் திறந்து, மணியடிக்க, வெள்ளை வெளேர் மாமி கதவு திறந்தார்.

"உத்தண்டராமன்னு போயட் இருக் காரா?"

பார்வையில் ஆச்சரியம். உடனே கதவை அகலத் திறந்தார்.

"வாங்கோ, உக்காருங்கோ."

சின்ன மரச்சேர்கள் கொண்ட வரவேற் பறை. கணேஷ் தன் பத்திரிகையின் பெயர் சொன்னான். இன்னும் ஆச்சர்யம்.

"இருங்கோ, குளிச்சிண்டிருக்கார். கூப் பிடறேன்."

அவர்களுக்கு உத்தண்டராமனைத் தெரிய நியாயமில்லைதான். ஆனால் பத்ரி நாரா யணனை, உத்தண்டராமனைப் போல் ஆழ மாய் யாரறிந்திருப்பார்?

"உத்தண்டராமன், பத்ரிநாராயணனுக்கு ரொம்ப குளோஸ் சார்! அவரப்பத்தி இவ ருக்கு நல்லா தெரியும். ஒரு காலத்துல இரட் டையர் மாதிரி இருந்திருக்காங்க."

"இருக்கட்டுமய்யா. நமக்கென்ன அதப் பத்தி? நமக்குத் தேவை பெரிய பேரு. கலா நேசனை எழுதச் சொல்லு. விளாசிடுவார். கண்ணுல தண்ணி வந்துடும். கண்டிப்பா அதுக்காகவே, ஆயிரம் காப்பி எக்ஸ்ட்ரா போகும்."



கலாநேசனுக்கு பத்ரிநாராயண னைப் பற்றி ஒன்றும் தெரியாதே என்று வாய்வரை வந்துவிட்டது. கணேஷுக்கு. அடக்கிக் கொண் டான். பெரியவர்கள் பேசுகிறார் கள். இடைமறிப்பது அடாத செயல்.

"கலாநேசன் யாரைப்பத்தி வேணுன்னாலும்தான் எழுது வாரு."

கல்யாணராமன் கீழ் ஸ்தாயி யில் முணுமுணுத்தார்.

"இருக்கட்டுமே. ஒரு விஷயம் புரிஞ்சுக்குங்க கல்யாணம். நாம நடத்தறது வியாபாரம். பத்ரிநாரா யணன் மரணம், ஒரு நியூஸ். மக்கள் மத்தியில் அதைப் பத்தி ஒரு பேச்சு இருக்கு. அதை நாம பயன்படுத்திக் கறோம். அவ்வளவுதான். அதுக்கு கலாநேசனை மாதிரி ஒரு பாப்பு லர் ஃபிகரை எழுதச் சொன்னா, வியாபாரத்துக்கு வியாபாரமும் ஆச்சு, இரங்கல் சொன்ன மாதிரி யும் ஆச்சு."

**ஆர். வெங்கடேஷ்**

"எதுக்குய்யா இரங்கல் செய்தியெல்லாம்...?" என்று ஆரம்பித்த எடிட்டர், பத்ரி நாராயணனுக்கு மக்கள் மத்தி யில் இருக்கிற முக்கியத்துவத்தைக் கொஞ்சம் அசை போட்டபின்,

"யாருக்குய்யா உத்தண்டராமனைத் தெரி யும்?" என்றார்.

கல்யாணராமன் மௌனம் காத்தார். அவர் கேட்கும் 'யார்' பெரும்பாலான மக்கள்.

உடனே கலாநேசன் தொடர்பு கொள் ளப்பட்டார். வேறொரு பத்ரிகைக்குத் தன் இரங்கலைத் தெரிவித்துக் கொண்டுவிட்ட தாக வருந்தினார். அதே வரிசையிலிருந்த பிற பிரபலங்களும் தொடர்பு கொள்ளப்பட, பத்ரிநாராயணன் அமெரிக்காவில் படுக்கை யில் சாய்ந்த போதே பிற பத்திரிகைகள் அவ ருக்கான இரங்கலைத் தயார் செய்யச் சொல்லி யிருந்தது தெரிய வந்தது! முன் யோசனை

யில்லாமல் போய்விட்டதே என்று வருந்தினார் எடிட்டர். காலமும் கடப்பதால், வேறு ஆளில்லாமல், உத்தண்டராமன் எங்கிருந்தாலும் கண்டுபிடிக்கப்பட வேண்டியவர் ஆனார்.

"வாங்கோ, வாங்கோ, பெரியவாளெல்லாம் ஆத்துக்கு வந்திருக்கேள்."

செக்கச்செவேல் உத்தண்டராமன். இரண்டாவது தொகுதியின் பின்னே இருந்த போட்டோ பார்த்திருக்கிறான். இங்கே சுத்தமான நரை. வெந்நீரின் வெப்பம் சிவக்க வைத்த காது, மூக்கு, சுருக்கங்கண்ட மார்பு. மேல்துண்டால் மார்பை மூடிக் கொண்டார்.

விஷயம் சொன்னான்.

"நாணா பத்திதானே?நன்னா தெரியுமே! இவருக்குக் கொஞ்சம் தூரத்துச் சொந்தம் கூட."

வாசல் படியில் மாமி நின்றபடி சொன்னாள்.

"மூந்தா நாள் ஹிண்டு பாத்தவுடனே வயத்த என்னமோ பண்ணித்து. இவர் கூடப் பேசலை. தலைக்கு ஜலம் விட்டுண்டு, பெருமாள்கிட்ட ரொம்ப நேரம் உட்கார்ந்திருந்தார்."

உத்தண்டராமன் வெறுமனே இருந்தார். அழுத்தமான துக்கம். கொஞ்சம் கழித்து.

"நான் எழுதணுமா?"

கணேஷுக்குச் சங்கடமாய் இருந்தது. அனாவசியமாய் எதையோ கிளறிவிடுகிறோம் என்று தோன்றியது.

"எடிட்டர் விருப்பப்படறாரு. உங்களுக்கு நல்லா தெரியும்னு கல்யாணராமன் சொன்னார்.

அமைதியானார். இரண்டு நிமிடம்.

"இப்பல்லாம் பழைய ஞாபகங்கள் திரும்பத் திரும்ப வந்துண்டே இருக்கு. பண்ணின தப்பு, பேசின பேச்சு, செய்கையெல்லாம் திரும்பத் திரும்ப ஞாபகம் வரது. இப்போ நாணா பத்தி திருப்பியும் யோசிக்கறதுன்னா, நான் இன்னும் ஒரு வாரத்துக்குத் தூங்க முடியாது. இந்தச் சலனமெல்லாம் கூடாதுன்னுதான் நான் ஒதுங்கியிருக்கேன்."

மாமி எலுமிச்சம்பழ ஜூஸோடு பிரசன்னமானார். பெரிய தம்ளர்.

"மெட்ராஸ் வந்தான்னா நாணா எங்காத்துக்கு வராம போமாட்டான். மன்னி மன்னிம்பான். பொரிச்ச கூட்டும், அக்காரடைசலும் அப்படி சாப்டுவான்."

மாமியும் உட்கார்ந்து கொண்டாள்.

"எப்ப வந்தாலும் ரெண்டு பேரும் சண்டை போட்டுண்டே இருப்பா. ஏதாவது ஒண்ணு கெடைச்சுடும்."

உத்தண்டராமன் மெல்லிதாய்ச் சிரித்தார். லயிப்பிலிருந்து மீண்டவர் போல்,

"சண்டையில்லை அது! விவாதம். ரெண்டு பேரும் ரெண்டு ஐடியா உள்ளவா. என்ன பண்ண முடியும்? பேச்சு முத்தித்துன்னா சண்டைதான்."

தம்ளரைக் கீழே வைத்தபோது, வயிறு திம்மென்றிருந்தது. மணி ஒன்பதரை இருக்கலாம். ஜாலியிட்ட ஜன்னலில் வெயில் உறைத்தது.

"திருப்பித் திருப்பி ஒரே விஷயம்தான். பேரு, புகழ், பணம். திருவல்லிக்கேணியில் இருந்ததுலேர்ந்து இதுதான். நான் கவிதை எனக்கு மட்டும்தான்பேன். அதை அவன் எல்லாருக்கும்பான். எல்லாருக்கும்னு சொல்லும்போது, கூடவே கமர்ஷியல் வேல்யுவும் வந்துடறதேம்பேன். அதுதான் எனக்கு வேணும்பான்."

"அவன் பேரு, பேட்டி, போட்டோவெல்லாம் பத்திரிகைல வரும்போது, சந்தோஷமா இருக்கும். இவரும் அவன் கூடத்தான் இருந்திருக்கார். வரட்டுப் பிடிவாதம். சொன்னா

கோபம் மட்டும் வரும். அதென்னமோ ஆசையே அத்துப்போச்சு. இன்னும் எனக்குப் போகலப்பா. நான்தான் இவர் எழுதற ஒவ்வொரு வார்த்தையையும் படிச்சின்டிருக்கேன். பத்திரிகைக்கு அனுப்புங்கோம்பேன். அதெல்லாம் உனக்குத் தேவையில்ல, போடிம்பார்."

உத்தண்டராமன் சிரித்தார்.

"இவாளுக்கெல்லாம் இன்னும் புரியலப்பா. உயர்ந்த கவிதை மனசினுடைய விஷயம். உயர்ந்த அனுபவம். மெல்ல அசை போட்டு அனுபவிக்கணும். எழுதும்போது தான் அதுக்கு வேறொரு வேல்யூ வந்துடறது. அதனாலதான் எழுதறதையே வுட்டுட்டேன்."

**க**ல்யாணராமனுக்குத் தகவல் சொல்ல வேண்டும். டம்மி போட ஆரம்பித்திருப்பார். பக்கம் ஒதுக்கச் சொல்ல வேண்டும்.

"அவரோட நீங்க இருக்கறாமாதிரி, ஏதாவது போட்டோ இருக்குமா சார்?"

மீண்டும் யோசித்தார்.

"இருக்கும். நானும் அவனும் நெறைய சுத்தியிருக்கோம். ஒவ்வொரு கோயிலா. ரெண்டு பேர் ஐடியாவும் ஒத்துக்கலையே தவிர, எப்பவும் சேர்ந்துதான் இருந்திருக்கோம். அதுக்குக் காரணமும் அவன்தான். எதிர்க் கருத்தையும் எடுத்துக்கற மனப்பக்குவம் அவனுக்குத்தான் உண்டு. உன் கவிதையெல்லாம் ரொம்பப் பொய்யாயிருக்கும்பேன். சரி, என்ன பண்றதும்பான். அவன் தேடின தெல்லாம் அடைஞ்சிட்டதா நெனச்சான். பாப்புலரா இருந்தாத்தாண்டா மதிப்பும்பான். என்னால ஒத்துக்க முடியலை...

"போன தடவை வந்த போதுதான் நானா பக்குவத்துக்கு வந்திருக்கான்னு தோணித்து. என்ன சாதிச்சோம் ரெண்டு பேரும். ரெண்டு பேருடைய ஐடியாவும் தோத்துப் போச்சுன்னுதான் தோணித்து. காலம் எல்லாரையும் குப்பையாத் தூக்கி வெளிய போட்டுடுத்து. கவிதை எனக்கு மட்டுமேன்னு சொன்ன என் கர்வமும் விதண்டாவாதம்னு தெரிஞ்சுது. காலம் அதுக்குள்ள கடந்து போச்சு. இனி ரெண்டு பேரும் ஆசைப் படறதுல ஒண்ணுமில்லைன்னு புரிஞ்சுண்டோம். எழுதறதையே விட்டுடலாம்னு முடிவு பண்ணோம். கடைசியில அவனுக்கு எல்லாமே திகட்டிப் போச்சு. நான் அந்தச் சுவையே வேண்டாம்னு ஒதுங்கிண்டேன். என்ன அடைய நெனச்சோம்னு தெரியாமலேயே போயிட்டுது."

உள்ளே கடிகார மணியடித்தது. பத்து! இங்கேயிருந்து மௌண்ட் ரோடு போவதற்குள் பதினொன்று ஆகிவிடலாம். கல்யாணராமனுக்குப் போன் செய்து தகவல் வேறு சொல்ல வேண்டும்.

"அப்போ நான் கௌம்பறேன். நாளைக்குக் காலையில வரேன். கொஞ்சம் எழுதி வச்சுடுங்க. ரொம்ப பெரிசா வேணாம். புல்ஸ்கேப்ல ரெண்டு பக்கம் வந்தாப் போதும். போட்டோ கிடைச்சாலும் நல்லது. கொஞ்சம் பாருங்களேன்."

"சரி."

**ம**றுநாள் காலை எழுதிவைத்திருந்தார். நுணுக்கி நுணுக்கி. இரண்டு பழைய போட்டோக்களையும் வைத்திருந்தார். எல்லாம் அழகாய் கவருக்குள் போட்டு, மேலே ஆசிரியர், பத்திரிகை பெயர், முகவரி எல்லாம் தெளிவாய்.

அடுத்த வாரம் வழக்கம்போல் வெள்ளியன்று இதழ் வெளியானது. உத்தண்டராமனின் இரங்கல் அதில் இல்லை. கடைசி நேரத்தில் ஒரு பக்க விளம்பரம் வந்ததென்று, இரங்கலைத் தூக்கி விட்டார்கள். கணேஷுக்கு அதன் தலைப்பு ஞாபகம் வந்தது: 'பெருங்கூட்டத்தில் ஒருவன்'!

குடும்பத்தில் அத்தனை பேரும் சம்பாதித்தால் கூட, இருக்கும் விலைவாசியைச் சமாளிக்க முடியாது போலிருக்கிறது. அப்படியிருக்கும் போது, ஒருவர் சம்பாத்தியத்தை மட்டுமே நம்பியிருந்தால் திடீரென்று பணத்துக்கு எங்கே போவது ? இதுதான் திருமதி கீதாவின் பிரச்னை. அவர் எவ்வாறு சமாளித்தார் ?



# ஸ்ரீராம் சிட்ஸ் - நம்பகமான தேர்வு

நீண்ட நாட்களாகவே ஒரு யோசனை. கணவருடைய வருமானத்தை மட்டுமே நம்பியிருக்கும் குடும்பம். இருக்கும் விலைவாசியில் திடீரென்று பணத்தேவை ஏற்பட்டால் என்ன செய்வது ?

கணவர் அலுவலகம் சென்ற பின், பகல் பொழுதைப் பயனுள்ள விதத்தில் செலவிட என்ன செய்யலாம் என யோசிக்கத் தொடங்கினார் திருமதி கீதா. ஒரு லெண்டிங் லைப்ரரி நடத்தினால் என்ன ? - எண்ணம் தோன்றிய நொடியிலேயே முடிவு செய்தார். அதன் மூலம் கூடுதல் வருவாய் கிடைக்கும் அல்லவா!

அடுத்த கட்டம் அதற்கான மூலதனத்தைத் தேடும் முயற்சி. உறவினர்கள், நண்பர்கள் என அணுகியபோது கிடைத்தது பணம் அல்ல, புத்திமதிதான். "அதெல்லாம் ஒன்றும் சரியாக ஓடாது". வங்கி உதவியை நாடினார். அங்கேயும் பலன் பூஜ்யம். என்ன செய்வது என்று புரியவில்லை.

அவருடைய அலைச்சல்களைப் பார்த்து அனுதாபப்பட்ட அவர் தோழி சுமதி ஒரு யோசனை சொன்னார். அந்த யோசனை அவர் கணவருக்கும் சரியென்று பட்டது.

அப்படியே செய்தார். விரைவிலேயே அது பலனளித்தது. 'மாருதி லெண்டிங் லைப்ரரி' என்கிற பெயரில் திருமதி கீதா தன் லட்சியத்தைத் தொடங்கினார். இன்று சிறந்த முறையில் வளர்ந்து இயங்கிக்கொண்டிருக்கிறது அந்த லெண்டிங் லைப்ரரி.

தோழி சொன்ன யோசனை என்ன தெரியுமா ?
ஸ்ரீராமில் சீட்டு சேர்ந்தால் பணம் தேவைப்படும் நேரத்தில் அது உதவுகிறது என்பதுதான்.

ஆமாம், ஸ்ரீராம் சிட்ஸ் - நம்பகமான தேர்வு.

ஸ்ரீராம் சித்திரத் திருவிழா

ஏப்ரல் 5-14, 1995

# ஞாயிறு போற்று!

சூரியன்
திரியின்றி
எரிகிற தீபம்

இரவுக் கோலியாத்தை
வீழ்த்திய
ஒற்றைக் கல்

வாயும் வயிறும்
போற்றுதற்கே
வாழ்க்கை சரியாயிருக்கிறது
இதில் ஞாயிறு போற்றுதல்
ஞாபக மறதியானது

ஞாயிறு போற்று
திங்கள் அழகாகும்

ஞாயிறு போற்று
கதிர் தொடாத
இடமெல்லாம்
உயிர்களின் கல்லறைதான்

காற்றைப் பெறவும்
காற்றாடி வாங்கக்
காசு செலவாகும்

ஞாயிறு வேண்டின்
நாமெழுந்து
நடந்தால் போதும்

தாவர ஜாதி
தானாய் உணவு
தயாரிப்பதற்கும்
சூரிய ஜோதி
அவசியம் தேவை

இமயப்பனியை இளகச் செய்யும்
கதிரின்
வெப்பக் கைகளால்தான்
கங்கை இன்னும்
காயாமல் இருக்கிறது

சூரியன் தனது
சுடரை மறைத்துக் கொண்டால்
கங்கை எப்போதோ
காவிரியின்
தங்கையாயிருக்கும்

பூவின் பொலிவும்
பூவையர் அழகும்
இருட்டில் பார்த்தால்
என்ன தெரியும்?

தன்னொளி ஈந்து
தங்கமுலாம் பூசித்
தந்திராவிட்டால்
தகரமாய் நிலவு
தனியே கிடக்கும்

தோன்றும் போதும்
மறையும் போதும்
மலர்ந்து சிரிப்பான்
மங்கலச் சூரியன்

சிரிப்பு என்பது
அகத்தின் அழுக்கை
அலசி அகற்றும்
அதிசய நெருப்பு

சத்தமாய்ச் சிரித்தால்
நாளங்களில் நன்றாய்
இரத்தம் பரவும்

சுத்தமாய்ச் சிரித்தால்
சுற்றியுள்ள மனிதருள்ளும்
உத்தம சுடர் பரவும்

பிறர் மகிழ்வில்
தன்மகிழும் தன்மைவர
ஞாயிறு போற்று

எங்கெல்லாம்
வெளிச்சம் தன்
விலாசமிழந்து கிடக்கிறதோ
அங்கெல்லாம் ஆதவனின்
அரங்கேற்றம் அவசியம்.

காலம் காலமாய்க் காதல்
கருப்பு ஆடை
கட்டியிருக்கிறது.

இதைச்
சூரியச் சோப்பெடுத்து
கசக்கி வெளுக்கும்
உயர்தரச் சலவை
ஊரெங்கும் தேவை

கருப்புப் பணம் என்னும்
கரிய பூதம்
தேசத்தைக் காவலில்
கட்டி வைத்திருக்கிறது.

அதை எரித்துச் சாம்பலாக்க
இளைய சூரியன்கள்
எழுந்தே ஆக வேண்டும்
சுற்றிச் சுற்றி இருள்
சுருண்டு படுத்திருக்கிறது

விழியெங்கும்
சூரிய விளக்கை ஏற்று
உள்ளங்களையெல்லாம்
ஒளியின் பிழம்பாய் மாற்று

— சூரியதாஸ்

சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் விமானம் சென்னையைத் தொடுவதற்குள் குழந்தைகள் களைத்துப் போயிருந்தார்கள். இமிக்ரேஷன், கஸ்டம்ஸ் எல்லாம் முடிந்து வீட்டிற்கு வந்து படுத்தாலும்... காலை உற்சாகத்துடன் மனக விழித்துக் கொள்கிறது. மெட்ராஸ் மணக்கும் காப்பி, ஹிந்து பேப்பர்... கன்னென்ற வெய்யில்... எந்த ஊர் போனாலும் நம்ம ஊர் போலாகுமா?

"பீச் போகலாமா?" கண் விழிக்கும் பொழுதே கேள்வி.

குழந்தைகளின் உற்சாகமெல்லாம் நாலு நாட்களுக்குத் தான். கசகசவென்று வியர்வை. கலங்கின தண்ணீர். சுற்றுப்புறம் சுத்தமும் சுகாதாரமும் இல்லாமல். "பாத்ரூம் நீட்டாவே இல்லையே." "தண்ணீர் ஏதோ வாசனை அடிக்கிறது. அப்பா!"

வயிறு சரியாக இல்லாமல் போகிறது இரண்டு பேருக்கும்.

லலிதாவிற்கு இதையெல்லாம் கவனிக்க எங்கே நேரம்? இது அவள் அம்மா வீடு. தோழிகள், புடைவைக் கடை, நகைக் கடை.... இத்யாதி.

குழந்தைகள் நச்சரிப்புத் தாங்காமல் வழக்கம் போல சீனி இதமாக ஆரம்பிக்கிறான். "லலிதா நீ வேண்டுமானால் கொஞ்ச நாட்கள் கழித்து வாயேன். நானும் குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு கருங்குளம் புறப்படறேன்?"

வழக்கம் போல ஊசிப் பட்டாசு வெடிக்க ஆரம்பிக்கிறது. மாமனார் விவேகமாகக் குறுக்கிடுகிறார். "லலிதா, மாப்பிள்ளை சொல்வது வாஸ்தவம். குழந்தைகளுக்கு இங்கே பொழுது போகலை. அங்கே ஆறு இருக்கிறது. மலை இருக்கு. குழந்தைகள் ஆசை தீர விளையாடும். சித்ரா பௌர்ணமி உற்சவம் வேறு ஆரம்பிக்கப் போகிறது. அவர் புறப்படட்டும்."

நெல்லை எக்ஸ்பிரஸ் கிளம்புவதற்குள் குழந்தைகள் குதிக்கத் தொடங்குகிறார்கள். "அப்பா, மலை, ஆறு எல்லாம் அப்படியே இருக்குமில்லையா?"

சிரிப்பு வருகின்றது. வேத காலத்திலிருந்தே ஓடும் தாமிரவருணி எங்கே போய் விடுவாள்? கருங்குள மலை எங்கே போகும்! திருப்பதி ஈசனே வேண்டி ஆசைப்பட்டு வந்து அமர்ந்த தலமல்லவா? ஐநூறு, அறுநூறு வருடங்களுக்கு முன்பு திருப்பதியிலே உடைந்த மரப்படியை, வெங்கடேசனாகவே இங்கே பிரதிஷ்டை செய்யும்படி உத்தரவு ஆயிற்றாம். சின்னஞ் சிறிய குன்றம். தாளமிட்டு அன்னம் பரி




மாறுவதற்குள் குழந்தைகள் மலை மீது ஏறி இறங்கி வந்து விடுவார்கள். மலையை ஒட்டி இரட்டைச் சாரியாய் வீடுகள். சக்திமிக்க ராசன். அந்தத் தெருவில் மட்டும் 23 ஐ.ஏ.எஸ். ஆபீசர்கள் உருவாகி இருப்பதாகக் கணக்குச் சொல்லுவார்கள். எவ்வளவோ பையன்கள் கம்ப்யூட்டர் வல்லுனர்களாக அமெரிக்காவிலே இருக்கிறார்கள், சீனியைப் போல.

இந்தோனேஷியாவில் மார்ச் மாதம் லெபரான். வேலை செய்பவர்களுக்குப் பதினைந்து நாட்களாவது சம்பளத்துடன் விடுப்புக் கொடுக்க வேண்டும் என்று சட்டம். அதனால் ஜகார்த்தா நகரமே காலியானது போலத் தோன்றும். குழந்தைகளுக்கும் பள்ளி விடுமுறை. சித்ரா பௌர்ணமி, வைகாசி விசாகம், குற்றால சீசன் என்று, சேர்த்து லீவு எடுத்துக் கொண்டு வந்து, கும்மாளமிட்டுப் போவது.

கருங்குள மலையின் ஒரு



புறம் வயல்களூடே வளைந்து வளைந்து செல்லும் ரயில். மற்றொருபுறம் திருச்செந்தூர் பாதையை ஒட்டி வளைந்தோடும் தாமிரவருணி. பௌர்ணமி இரவிலே குன்றின் மீது உட்கார்ந்து கொண்டு வெள்ளிக் கோடு போட்டது போலப் போகும் நதியைப் பார்ப்பது சுகானுபவம். அதுவும் வைகாசத்திற்கு முதல் நாளிலிருந்தே மாட்டு வண்டிகள் சாரி சாரியாகப் போகத் தொடங்கும். எத்தனையோ டெம்போக்கள், மெடாடர் வேன்கள் ஓடத் தொடங்கிய போதும் வைசாகத்திற்கு மாட்டு வண்டி கட்டுவது நிற்கவே இல்லை. கடவுளே நிற்கவே கூடாது.

நெல்லை ஜங்ஷனுக்கு அப்பா வந்திருந்தார். வாயெல்லாம் பல். பேரக் குழந்தைகள், மேலே ஏறி துவம்சம் செய்து, பேசிச் சிரித்து... திக்குமுக்காடிப் போனார். அம்மா இளைத்திருந்தாள். அன்பையெல்லாம் கொட்டிக் கொடுக்கும் அம்மா. மண்டை மண்டையாய் தேங்காய்ச் சீடை, நாகர் கோவில் போளி, புழுங்கலரிசி முறுக்கு, உக்காரை, யானைக் கொம்பன் அரிசிச் சோறு, கண்ட வற்றல் குழம்பு, குதிரைவால் அரிசி, கோவில் பட்டி உளுந்து போட்டு அரைத்த தோசை. சாப்பாடு, பேச்சு, சாப்பாடு பேச்சு. தெருவில் இருக்கும் அத்தனை தோழர்கள் சம்பந்தப்பட்ட வம்பு முழுவதும் அம்மா சேகரித்து வைத்திருப்பாள். கேட்டுக் கொண்டே, என் நீல ட்ரங்க் பெட்டி எங்கே? என்று ஒரு கத்தல். தானும் இந்த வீட்டின் குழந்தை என்று ஸ்தாபிக்கும் பொல்லாத் தனம். எப்போதுமே இங்கேயே இருப்பது போல பாவனை. கள்ளத்தனம்.

உறவினர்களுக்கு, ஆத்தூர் கொடிக்கால் ராவுத்தருக்கு, வேலைக்காரப் பிச்சிக்கு, சமையற்காரப் பாட்டிக்கு அவன் பேரனுக்கென்று விதவிதமான சாமான்கள், சாக்லேட்டுக்கள். அக்காக்களுக்குப் பவுன், அம்மாவுக்கு....?

"உங்கம்மாவிற்கு என்ன வாங்க வேண்டும்? சொல்லி விடுங்கோ! அப்புறம் பொல்லாப்பு வேண்டாம்!"

வருடா வருடம் லலிதா கேட்கும் இதே கேள்வி... ஒரே பதில் : "அம்மாவிற்கு ஒன்றும் வாங்க வேண்டாம்."

லலிதா தலையை நொடித்துக் கொண்டு போய் விடுவாள். அம்மா என்றால் தன் கணவனுக்கு உயிர் என்று அவளுக்குத் தெரியும். பின் ஏன்?

காலை எழுந்திருக்கும்பொழுதே "அப்பா ஸ்விம்மிங்."

தோசை, மிளகாய்ப் பொடி, காப்பி சகிதம் தாமிரவருணிக் கரைக்குச் சென்றால் தானும் குழந்தையாகிப் போகும் அதிசயம். ஆய்ந்து ஓய்ந்து வீட்டிற்கு வரும் வழியில் ஆத்தூர் நாராயணா பஸ்ஸிலிருந்து ராவுத்தர். கொடிக்கால் வெற்றிலை, பூலாச்செண்டு பழம், கோழிக் கூட்டுப் பழம்.

"ஜகார்த்தாவிலே எத்தனை விதமான பழங்கள் கிடைக்கிறது. அது என்ன, கைக் குழந்தை விரல் போல அந்த பூலாச்செண்டு ஒசத்தி."

"திருநெல்வேலிக்காரனுக்கு லோகம் முழுக்கப் போனாலும் பூலாச்செண்டு பழம் தாண்டி அமிர்தம்!"

"தம்பி திருச்செந்தூர் போகும் பொழுது

ஆத்தூருக்கு வந்து போங்க" என்றார் ராவுத்தர், தனக்களித்த வாக்மேனையும் வீடியோ கேசட்டுகளையும் திருப்தியுடன் தடவிய படி.

"அப்பா நான் கொடுத்த வீடியோ கேமிராவில் ஒரு காசட் முழுக்க காலையில் அம்மா எழுந்திருந்து தாமிரவருணியிலே குளிச்சுட்டு வரதிலேர்ந்து, ராத்திரி வாசப் படிக்குப் போய், மலையை நிமிர்ந்து பார்த்து, "என் அப்பனே ஆண்டவா"ன்னு கன்னத்திலே போட்டுண்டு படுத்துப்பாளே.... அது வரை பொறுமையாய் நீங்க ரெக்கார்ட் பண்ணித் தரணும்."

அம்மா புன்னகைத்தாள். "அம்மாவிற்கு ஒன்றும் வாங்கி வராதே. ஃபோட்டோ மாத்திரம் எடுத்துக்கோ."

முதல் அடி. அம்மாவின் முகத்தைப் பார்த்தான். சலனமில்லாமல் இருந்தது. அம்மா வழக்கம் போல கலகலப்பாக இல்லையோ என்று தோன்றியது.

லலிதாவும் வந்தாயிற்று. குற்றாலக் குளியல். சுலோசனா முதலியார் பாலத்தி விருந்து லக்ஷ்மி விலாஸ். திருநெல்வேலி அல்வா கிலோ கிலோவாகக் காலியாகிறது. சிரிப்பு. சந்தோஷம். அம்மாவின் மடி மீது படுத்துப் புரளும் பொழுது சுவர்க்கம். இருந்தாலும் ஒரு கிலுக்கம். மெலிதான வெடிப்பு கண்ணுக்குத் தெரியாதது போல.

புறப்படும் நாளும் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இந்த சுவர்க்கத்தை விட்டுப் போக வேண்டுமா? டாலர் சம்பளம் இழுக்கிறது. வாழ்க்கையின் நிதர்சனங்கள்.

லலிதா குழந்தைகளுடன் மலைக்குப் போயிருக்கிறாள். அம்மா பெட்டியில் சாமான்களை அடுக்கிக் கொண்டு இருக்கிறாள்.

"அம்மா, எனக்கு என்னென்ன வெச்சிருக்கே?" ஆவலுடன் கேட்கிறான்.

"ஆமாம். தங்கமும் வைரமுமாக அம்மாவிற்கு வாங்கிக் கொண்டு வந்து கொட்டியிருக்கே பாரு. உனக்கு பாக் பண்ணுகிறேன்!"

நின்று கொண்டிருக்கும்பொழுதே, எரிமலை வெடித்து முகத்தில் தீப்பிழம்பு கொட்டிய மாதிரி, எங்கோ மனசிலே எதுவோ பட்டென்று உடைந்து போகிறது. இனி ஒட்டவே ஒட்டாதது போல. முழு நிலவு விழுந்து வானமே சூன்யமாகப் போய் விட்ட மாதிரி.

சீனியின் முகத்தைப் பார்த்து அம்மா ஒரு நிமிடத்தில் சுதாரித்துக் கொண்டு விடுகிறாள்.

"விளையாட்டுக்குச் சொன்னேன்டா செல்வமே. உனக்குப் பருப்புப் பொடி, தேங்காய்ப் பொடி, வேப்பிலைக் கட்டி, சீனியவரக்கா



"அவரை ஏன் எல்லோரும் அடிக்கிறாங்க?"

"ரயில்வே பட்ஜெட்ல வித்அவுட்ல போறவங்களுக்குச் சலுகை ஒண்ணும் கொடுக்கலையேன்னு கேட்டு உண்ணாவிரதம் ஆரம்பிச்சாராம்!"

- ராதா வாசுதேவன்

---

வத்தல், தடியங்கா வத்தலெல்லாம் நானே செய்து வச்சிருக்கேன் பாரு."

லலிதா வந்து விடவே பேச்சு நின்று விடுகிறது. ஆனால் அதற்குப் பிறகு எதுவுமே பிடிப்பில்லாமல் போகிறது.

"ஏன்னா என்னமோ போல இருக்கேள்?" என்று லலிதா கூடக் கேட்கிறாள்.

"சீனி, உனக்கு உடம்பு சரியா இல்லை போல இருக்கு. இப்போ ஊருக்குப் போகணுமா?" என்று அப்பா அடிக்கடி கவலையோடு கேட்கிறார்.

நொடிக்கொரு தடவை அம்மா உச்சி மோந்து அணைத்துக் கொள்கிறாள்.

சீனி ஊருக்குப் போய் ஒரு மாதமாகிறது. அம்மா சோர்ந்து இருக்கிறாள். ஆடி வெள்ளிக் கிழமை. கோவிலிலே தாயாரை தரிசித்து விட்டு மலைப்படியிலே உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். குழந்தையின் சோர்ந்த முகம் நினைப்பிலே தோன்றி கண்ணிலே நீரை வரவழைக்கிறது. அப்பா அடிவாரத்திலிருந்து மேலே வருகிறார்.

"கோமதி. பாளையங்கோட்டையிலே டாக்டர் சுப்பையா ஜகார்த்தா போயிருக்கிறார் என்று போனேன். சீனி, உனக்கு லெட்டரும் நிறைய நகைகளும் கொடுத்து அனுப்பி இருக்கிறான். கேட்டிருந்தையா என்ன?" என்று லெட்டரையும் நகைப் பெட்டியையும் கொடுத்தார்.

அம்மா பரபரவென்று லெட்டரைப் பிரித்தாள்.

அன்புமிக்க அம்மா,

அநேக [illegible]ஸ்காரம்.

நா[illegible]தாவும் குழந்தைகளும் சௌக்கிய[illegible] சேர்ந்தோம். வந்த தினத்தி[illegible]ந்தைகள், திரும்ப எப்போது கருங்குள[illegible]வோம் என்று கேட்கத் தொடங்கியாயிற்று.

அம்மா, நேரில் பேசக் கூச்சப்பட்ட விஷயங்களை நான் உனக்கு லெட்டரில் எழுதுகிறேன். தவறாக எண்ணாதே. ஒவ்வோர் ஆணும் மனத்தளவில் ஏதாவது ஒருவிதத்தில் பெண்ணைச் சார்ந்தேதான் வாழுகிறான், வாழ முடியும். தாயாகவோ, தாரமாகவோ, தமக்கையாகவோ, தங்கையாகவோ அல்லது தன் மகளாகவோ, தோழியாகவோ ஒரு பெண் இல்லாமல் வாழவே முடிவதில்லை. அதிலும் தாயென்ற உறவு பரம சுகமானது. இவள் என்னுடையவள், எனக்காக மட்டுமே, இவளுடைய உலகமே நான்தான் என்று நினைப்பதிலே ஒரு கர்வம் ஒரு ஆணவம் ஒரு திமிர், ஒரு தைரியம். தாய்க்குப் பின் அந்த ஆளுமையைத் தாரத்திடம் காண்பிக்கிறான். அந்த உரிமையிலே ஒரு சுகம்.

ஒருமுறை நான் துபாய் போயிருந்த பொழுது எல்லோரும் "அங்கே என்ன கிடைக்கிறது என்று கேட்டார்கள். நீ ஒருத்தி மட்டும், "உனக்கு எல்லாம் கிடைத்ததாடா குழந்தே" என்று கேட்டாய். என்னைப் பற்றி மட்டுமே நினைப்பவள் இவள் என்ற பெருமை. லலிதா ஒவ்வொருமுறை உனக்காக என்ன வேண்டும் என்று கேட்கும் பொழுது ஒன்றும் வேண்டாமென்று சொல்லுவேன். ஏனென்றால் ஜகார்த்தாவிலிருந்து என்ன சாமான் வரும் என்று மற்றவர் நினைக்கும் பொழுது சீனி மட்டும் வந்தால் போதும் என்று நீ நினைப்பாய் என்ற என் திமிர். தற்பெருமை.

ஆனால், அம்மா மன்னித்துக் கொள். ஒன்றை மறந்து விட்டேன். நீயும் ஒரு பெண். உன் சுற்றத்தவர், 'உன் பையன் உனக்கு என்ன கொண்டு வந்தான்' என்று கேட்டு உன்னைச் சலனப்படுத்தி இருப்பார்கள். உனக்கு டாக்டர் சுப்பையா மூலமாக நிறைய நகைகள் அனுப்பியிருக்கிறேன்.

எங்கோ படித்தது ஞாபகம் வருகிறது. பெண்களின் அன்பினால் மட்டும்தான் உலகம் இயங்குகிறது. பெண்களெல்லாம் அன்பை மறந்து வியாபாரிகளாகும் பொழுது உலகம் பாலைவனமாகி விடும்... நான் சுயநலவாதி என்று நினைக்காதே. உன் அன்பு எனக்கு முழுசா வேணும்.

உன் சீனி.

அம்மா கண்களிலிருந்து கண்ணீர் கொட்டியது.

"குழந்தே, குழந்தே" மௌனமாக இருந்த அப்பாவைப் பார்த்துப் புலம்பினாள்.

"தங்கம் போல நீ இருக்க தங்கத்தை ஆசைப்படுவேனாடா செல்வம். ஒரு நிமிஷ அஞ்ஞானத்திலே பேசி விட்டேனடா செல்வமே."

"ஏன்னா இந்த நகைகளையெல்லாம் தாயாருக்குச் சாத்தி விடுங்கோ. லோகத்திலே இருக்கும் அத்தனை பெண்களுடைய மனசிலே இருக்கும் அன்பு என்ற அமுதசுரபி என்றைக்குமே வற்றி விடக் கூடாது என்று வேண்டிண்டு சாத்தி விடுங்கோ!"

# தியேட்டர் ஊழலுக்கு அதிகாரிகள் உடந்தையா?

●● சில நாட்களுக்கு முன் சென்னையிலிருந்து குடும்பத்துடன் திருவனந்தபுரம் சென்றேன். பொழுதுபுலரும் நேரம் எர்ணாகுளம் வந்து சேர்ந்த பிறகு ரயில் பெட்டிக்குள் ஓயாமல் பிச்சைக்காரர்கள் வந்தவண்ணம் இருந்தனர். இவர்கள் விவரிக்க ஒண்ணாத பலவித நோய்களையும் உடையவர்கள். துர்நாற்றம் சகிக்க முடியவில்லை. டிக்கெட் பரிசோதகர் கண்டுகொள்ளவில்லை. போலீஸில் புகார் செய்தும் பயனில்லை. ரயில்வே நிர்வாகம் இதைக் 'கவனித்து பயணிகளின் சுகாதாரத்தைக் காக்க முன்வருமா?

சென்னை - 106, ரமணிரங்கநாதன்.

●● சமீபத்தில் தென்னாற்காடு வழியாகப் பல ஊர்களுக்கும் சென்ற போது ஒரு வேதனை தரும் அம்சத்தைச் சந்திக்க நேரிட்டது. 'ஊர்ப் பெயர் மற்றும் பல ஊர்களுக்கான தூர அறிவிப்புப் பலகைகள் மேல் கட்சி போஸ்டர்கள் ஒட்டப்பட்டு இருந்தன. இந்த இழி செயலை உடனே நிறுத்துமாறு கிராம மக்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை - 33,
ஆர். ஆர். தமன்.

●● பட்டுக்கோட்டையில் உள்ள சில சினிமா தியேட்டர்களில் ஒரே ஒரு கௌண்டரில்தான் டிக்கெட் கொடுக்கிறார்கள். அங்கு கொடுக்கப்படும் டிக்கெட்டில் 'ரிசர்வேஷன் கூப்பன்' என்று மட்டுமே அச்சிடப்பட்டிருக்கும். விலை எதுவும் போட்டிருக்காது. புதுப்படம் என்றால் ரூ. 25/- என்றும் பழைய படம் என்றால் ரூ. 10/- என்றும் கௌண்டரிலேயே விற்பனை செய்கின்றனர். யார் வேண்டுமானாலும் எங்கு வேண்டுமானாலும் உட்கார்ந்து கொள்ளலாம். இதற்கு அதிகாரிகள் உடந்தை!

பட்டுக்கோட்டை, மங்கைதாசன்.

●● பத்திரிகைகளுக்கு சந்தா கட்டுபவர்களுக்கும், பத்திரிகைகளில் எழுதுபவர்களுக்கும் பத்திரிகைகளின் பிரதிகள் பல நேரங்களில் போய்ச் சேர்வதே இல்லை. பத்திரிகை அலுவலகத்துடன் தொடர்பு கொண்டால், 'நாங்கள் சரியாக அனுப்பி விடுகிறோம்' என்கிறார்கள். தபால் துறையினர், பத்திரிகை இதழ்கள் ஒழுங்காகப் போய்ச் சேர ஏற்பாடு செய்யக் கூடாதா? சந்தா கட்டியவர்களின் மனநிலையை அவர்கள் எண்ணிப் பார்க்கக் கூடாதா?

சென்னை - 91, சித்ரகலாஸ்ரீதரன்.

●● தமிழ் வளர்த்த - வளர்த்து வருகிற மதுரை நகரில் கவியரசன் பாரதிக்குச் சிலை இல்லாதது பெருங்குறையே. இத்தனைக்கும் நகரில் உள்ள பழம்பெரும் பள்ளிகளில் ஒன்றான சேதுபதி உயர்நிலைப் பள்ளியில் பாரதியார் தமிழ் ஆசிரியராக வேறு பணியாற்றி உள்ளது வரலாற்றுக் குறிப்பாக நிற்கிறது. நகர மக்கள் கொஞ்சம் முயற்சி எடுத்தால் நகரின் மையப் பகுதி ஒன்றில் மறுமலர்ச்சி நாயகனுக்குச் சிலை எழுப்புவது சிரமமான காரியமல்ல.

சென்னை - 5, பெ. சு. சங்கரன்.

# நினைவலைகள்

***"THE FIRST MAN TO COMPARE A WOMAN TO A FLOWER IS A GENIUS. THE SECOND IS A FOOL"***

வெற்றிகிட்டும் நேரத்தில் எதிர்காலப் பணிகளைப் பற்றி சிந்திக்கிறோம்; திட்டங்கள் வகுக்கிறோம்.

தோல்வி ஒன்றைத் தழுவும் போது கடந்த காலத்தைப் பற்றி நினைத்து அசைபோட்டுப் பார்க்கிறோம்.

நின்று "திரும்பிப் பார்"க்கின்ற வாய்ப்பினைத் தருவதற்குத்தான் தோல்விகள் அவ்வப்பொழுது குறுக்கிடுகின்றனவோ?

'இந்தப் படம் தோல்வியடையத்தான் போகிறது' என்று முன்கூட்டியே தீர்மானித்துக் கொண்டு யாரும் படம் தயாரிப்பதில்லை; யாரும் இயக்குவதுமில்லை.

சிரத்தை, அக்கறை, உழைப்பு எல்லா முயற்சிகளுக்கும் தான் கொடுக்கப்படுகின்றன. எனினும் சில படங்கள் தோல்வியைத் தழுவுகின்றன.

சமீபத்தில் மதுரை சென்றிருந்தேன். சில விசிறிகள் ஒரு திரைப்படத்தைக் குறிப்பிட்டுச் சொல்லி, "இந்தப் படத்தை உண்மையாகவே நீங்கள்தான் டைரக்ட் செய்தீர்களா?; சத்தியமாகச் சொல்லுங்கள்" என்று செம்மையாகப் பிடித்துக் கொண்டார்கள்.

"உங்கள் பெயரை மற்றவர்கள் உபயோகப்படுத்திக் கொள்கிற மாதிரி கடன் கொடுக்காதீர்கள்" என்கிற தோரணையில் ஓர் அன்புக் கட்டளை வேறு இட்டார்கள்! அவர்களது எதிர்பார்ப்புகளுக்குக் கிடைத்த ஏமாற்றம் ஒருபுறமிருக்க, அவர்கள் என் மீது வைத்திருக்கும் இமாலய நம்பிக்கை என்னை சிரம்தாழ்த்தச் செய்தது.

ஆனால் ஒன்று! எனது திரைப்படங்களில் சில தோல்வியுற்றிருக்கலாம்; ஆனால் நான் தோல்வியடைந்ததில்லை. எனது முழுமையான ஈடுபாடும் உழைப்பும் என்றைக்குமே இம்மியளவு கூட அவற்றில் குறைந்ததேயில்லை.

"நான் எந்தத் திரைப்படத்தையும் எடுத்து முடிக்கின்ற வரை, எனது நரம்பு, நகம், சதை, மூச்சு, இரத்தம் அத்தனையும் ஒரே நேரத்தில் முழு மூச்சில் ஈடுபடுகிறது போல்தான் என்னை முழுவதுமாக அதில் ஈடுபடுத்திக் கொள்கிறேன் - ஒரு பெண்ணுடன் உடலுறவு கொள்வது போல்" என்று சொன்ன ஒரு பிரிட்டிஷ் திரைப்பட இயக்குநரின் (ஜான் சிலீஷன்ஜர்) கூற்று இந்த நேரத்தில் என் கவனத்திற்கு வருகிறது.

கலைஞன் வளருகின்ற நேரத்தில் அவனுடைய அறிவின் வளர்ச்சி எவ்வளவு நிதர்சனமோ அதைப் போன்றுதான் அவனுக்குள்ளே அவ்வப்பொழுது எழுகின்ற சந்தேகங்களும்.

'மக்கள் எதனை ஏற்றுக் கொள்வார்கள்? எதனை ஒதுக்குவார்கள்? இப்படிப்பட்ட வருணனை அவர்களை எட்டுமா? இதற்குப் பதிலாக வேறு விதமாகச் சொல்லியிருந்தால் கதாபாத்திரங்களுடன் ஒன்றியிருப்பார்களோ?' என்கிற சந்தேக வியாதியினால்தான் சில நேரங்களில் தடம் புரண்டு விடுகிறோம்.

பின்னோட்டம்... அதாவது flash back!

கதாநாயகன் அல்லது கதாநாயகியின் முகத்தில் சுழலும் கோடுகளிலிருந்து ஆரம்பமாகி அவன், அவள் சம்பந்தப்பட்ட முன்கதையினைக் கூறி, மறுபடியும் சுழல் கோடுகளில் முடித்தால்தான் அவன் அல்லது அவள் கடந்த கால சம்பவங்களை நினைத்துப் பார்க்கிறார்கள் என்பதை ரசிகப் பெருமக்களுக்குப் புரிய வைக்க முடியும் என்கிற சினிமா இலக்கண ரீதியில்தான் flash back காட்சிகள், சினிமா நூற்றாண்டு விழா நடக்கின்ற இந்நாட்களிலும், இன்னமும் பல படங்களில் இடம் பெறுவதை நாம் காண்கிறோம்.

இந்த இலக்கணத்திலிருந்து மாறுபட்டுச் சொல்ல நினைக்கும் புதுமை வேட்கையின் அடிப்படையில், கடந்த கால நிகழ்ச்சிகளை வரிசைப்படுத்திக் கூறாமல், எண்ணிப் பார்க்கும் நாயகியின் நினைவில் தோன்றுகின்ற வரிசைப்படி நிகழ்ச்சிகளை முன்னும் பின்னுமாகச் சொல்கின்ற பாணியை எனது "அவர்கள்" திரைப்படத்தில் கையாண்டு பார்த்தேன்.

கதாநாயகி பம்பாயிலிருந்து சென்னைக்கு ரயிலில் வந்து கொண்டிருக்கிறாள். அவளது எண்ணக் கோர்வைகளின்படி தனது கணவனிடமிருந்து அவள் பெற்ற விவாகரத்து பற்றிய கோர்ட் சம்பவம் முதலில் காட்டப்படுகிறது... அதன் பிறகு... அவள் அந்தக்



• 47 நாட்கள் (படம் உதவி : செல்லப்பா)

கணவனோடு நடத்திய குடும்ப வாழ்க்கையின் கசப்பான அனுபவங்கள் சொல்லப்படுகின்றன. அதற்குப் பின்னால்தான் அவளது கல்யாணத்திற்கு முந்தைய வேறொருவரோடு அவளது காதல் அனுபவங்கள் சொல்லப்படுகின்றன.

விமர்சன ரீதியிலே இப்படிப்பட்ட narrative ஒரு சிறந்த technique ஆகப் பாராட்டுப் பெற்றபோதிலும், பொது மக்களின் மனதில் கதையும் சம்பவங்களும் ஆழப் பதிகின்ற ஒரு வாய்ப்பினை இழந்து, படம் பார்க்கின்ற பெருவாரியான மக்களுக்கு emotional identificationஐ ஏற்படுத்தத் தவறியது. 'It was a costly experiment' என்பது படம் வெளியான பிறகு எனக்குக் கிடைத்த ஒரு பாடம்.

EXPERIENCE IS THE BEST OF SCHOOL MASTERS; ONLY THE SCHOOL FEES ARE HEAVY
- BENJAMIN FRANKLIN -

"இரண்டு அல்லது இரண்டரை மணி நேரம் நம்மை நம்பி இருட்டறையில் உட்கார்ந்து திரையையே உன்னிப்புடன் கவனித்துக் கொண்டிருக்கும் ரசிகர்களைத் திருப்திப்படுத்துவதுதான் படைப்பாளிகளின் கடமை."

Truffaut என்கிற மிகப் பெரிய இயக்குநர்தான் இவ்வாறு சொல்லியிருக்கிறார்.

குழந்தையைச் சிரிக்க வைக்க, பொம்மையைக் காட்டி, நிலவைக் காட்டி, பூச்சாண்டியைப் பற்றிச் சொல்லி, சில சமயங்களில் மற்றவர்கள் நம்மையே கேலியாகப் பார்க்கின்ற அளவுக்கு அர்த்தமில்லாத சத்தங்களை எழுப்பி குழந்தைகள் முன் கோமாளியாகவும் நாம் மாறுவதில்லையா? அது போன்றுதான்.

சில நேரங்களில் பல குழந்தைகள் சிரித்து விடுகின்றன. சில குழந்தைகள் என்ன செய்தாலும் சிரிப்பதில்லை!

'மூன்றாம் பிறை' கமல்ஹாசன், ஸ்ரீதேவியைச் சிரிக்க வைப்பதற்காக என்னென்ன சர்க்கஸ் வேலைகளையெல்லாம் செய்து காட்டுவார் என்பதை நினைத்துப் பாருங்கள். 'மூன்றாம் பிறை' ஸ்ரீதேவியின் மனநிலையில்தான் மக்கள் இருக்கிறார்கள் என்று நான் சொல்வதாக நீங்கள் தப்பர்த்தம் செய்து கொண்டால் இந்த உதாரணத்தை censor செய்து கொள்ளவும்.

'நினைத்தாலே இனிக்கும்' சிங்கப்பூர் படப்பிடிப்புகள் முடிந்த நிலையில் பிரேமாலயா வெங்கட்ராமன் சொன்னார்.

"யாரும் இதுவரை exploit பண்ணாத வெளிநாட்டு லொகேஷன்களை நிலைக்களனாக வைத்து அடுத்த படம் தயாரிக்க வேண்டும்" என்று தனது ஆசையை என்னிடம் வெளிப்படுத்தினார். சிவசங்கரியின் '47 நாட்கள்' நாவலை நான் வெங்கட்ராமனுக்கு நினைவுபடுத்தினேன்.

98 சதவிகிதம் அமெரிக்காவில் நடப்பதாக அமைந்த கதை அது. அமெரிக்காவுக்குப் பதில் ஃபிரான்ஸை என்று வைத்துக் கொண்டு திரைக்கதையை மாற்றினால் அந்த நாட்டின் புராதனக் கலைகளும் கட்டடங்களும் தற்கால சூழ்நிலைகளும் ஒன்று சேர்ந்து கதையின் களனாக அமைய, திரைப்படத்திற்கு மிகப் பெரிய வரவேற்பு கிடைக்கும் என்று நாங்கள் முடிவு செய்தோம்.

# கே. பாலசந்தர்

Locationகளுக்குத் தகுந்த மாதிரி திரைக்கதையை நான் அமைத்துக் கொண்டு, வசனம் எழுதித் தருகின்ற பொறுப்பை சிவசங்கரி அவர்களிடமே ஒப்படைத்தேன்.

முதன் முறையாக ஃபிரான்ஸ் நாட்டையும் பாரிஸையும் தமிழ்த் திரைப்படத்தில் முழுமையாகக் காட்டப் போகிறோம் என்று நினைத்தபோதுதான் எனக்கு அந்த saying நினைவுக்கு வந்தது.

"முதன் முறையாகப் பெண்களைப் பூக்களுக்கு உவமையாகச் சொன்னவன் ஒரு மேதை! அதையே இரண்டாவது முறையாகச் சொல்பவன் ஒரு முட்டாள்"

ஆக, நான் ஒரு மேதை என்று நினைத்துக் கொண்டேன். தமிழ், தெலுங்கு இரு மொழிகளிலும் அந்தக் கதையைப்

படமாக்க முடிவு செய்ததால் பொதுவாக இரு மொழிகளுக்கும் ஏற்ற நடிக நடிகையரைப் பார்க்க வேண்டி வந்தது. சிரஞ்சீவி அவர்களைத் தமிழில் அறிமுகப்படுத்தும் வகையிலும் ஜெயப்பிரதா அவர்களைக் கதாநாயகியாகவும் தேர்வு செய்தேன்.

கதாநாயகன் ஒரு கிராமத்துப் பெண்ணை இந்தியாவில் திருமணம் செய்து கொண்டு பாரிஸ் அழைத்துச் செல்கிறான். அங்கே அவனுக்கு ஏற்கெனவே மணமான வெள்ளைக்கார மனைவி ஒருத்தி இருக்கிறாள். இந்த உண்மையைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கதாநாயகி உணர ஆரம்பிக்கிறாள். அங்கே அவள் சிறைப் பறவையாகக் கொடுமைப்படுத்தப்படுகிறாள். கதாநாயகி யார் மூலம், எப்படி தப்பி, இந்தியா வந்தடைகிறாள் என்பதுதான் கதையின் முடிச்சு!

தினந்தோறும் காலையில் படப்பிடிப்பு ஆரம்பமாகும் போது நாங்கள் கற்பூரம் ஏற்றி வணங்கி, தேங்காய் உடைப்பது வழக்கம். ஒரு தேங்காயின் விலை இங்கே ஒரு ரூபாய் என்றால் பாரிஸில் 15 ரூபாய்!

ஒருநாள் எங்கள் படப்பிடிப்பைப் பார்த்துக் கொண்டிருந்த பிரெஞ்சுக்காரர் ஒருவர் தேங்காய் உடைப்பதன் பொருள் என்னவென்று கேட்க, "தடையின்றி வேலை நடப்பதற்காக ஆண்டவனை வேண்டிக் கொள்வதற்கான ஒரு அடையாளம்தான் இது" என்று எங்கள் தயாரிப்பு நிர்வாகி கூற அவர் ஏளனமாக வாய் விட்டுச் சிரித்தார்.

அவருக்குத் தெரியாதென்று நினைக்கிறேன். ஒரு மேல்நாட்டு இயக்குநர் Werner Horzog ஒரு படத்தில் குள்ளர்களை வைத்துப் படம் எடுத்துக் கொண்டிருக்கையில், அந்தக் குள்ளர்களில் ஒருவர் பின் ஒருவராக மூன்று பேர் இறந்து விடவே, "இனிமேலும் எந்த இடையூறும் இல்லாமல் படப்பிடிப்பு நடந்து நிறைவேறினால் முட்கள் நிறைந்த சப்பாத்திக் கள்ளிகளின் மீது நடப்பேன்" என்று வேண்டிக் கொண்டாராம். இதுவும் தீ மிதிப்பதைப் போன்ற ஒரு நேர்த்திக் கடன் தான். அவர் வேண்டிக் கொண்டது போலவே எந்த விக்கினமும் இல்லாமல் படப்பிடிப்பு நடந்து முடிந்து போகவே சப்பாத்திக் கள்ளிகளை வெட்டித் தரையில் பரப்பி அதன் மீது நடந்து சென்று நேர்த்திக் கடனை நிறைவேற்றி வைத்தாராம்.

47 நாட்கள் ஷூட்டிங் தொடர்ந்து இடைவிடாமல் 35 நாட்கள் பாரிஸிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் நடைபெற்றது. அங்கே ஜூலை மாதத்தில் இரவு எட்டு மணி வரை சூரிய வெளிச்சம் இருக்குமென்பதால் காலையில் எட்டு மணிக்குத் தொடங்கும் படப்பிடிப்பு இரவு எட்டு மணி வரை தொடர்ந்து நடக்கும்.

படம் வெளியாயிற்று. அதன் பிறகு நமது தமிழகத்துக் கல்யாணச் சந்தைகளில் மணமகன் வெளிநாட்டில் சம்பாதித்துக் கொண்டிருக்கிறான் என்றாலே பெண்ணைப் பெற்றவர்கள் '47 நாட்கள்' சினிமா மாதிரி ஆகி விடப் போகிறதென்கிற ஐயப்பாட்டை எழுப்பி ஒருமுறைக்கு இருமுறை மணமகனைப் பற்றியும் அவனது நன்னடத்தை பற்றியும் விவரமாகக் கேட்டறிந்து கொண்டு தான் செயல்பட ஆரம்பித்தார்கள். இதுவே அந்த திரைப்படத்திற்குக் கிடைத்த மிகப் பெரிய வெற்றி.

THE GREAT HOPE OF SOCIETY IS INDIVIDUAL CHARACTER.

வெளிநாடுகளில் இந்திய சமூகத்தின் மரியாதை ஒவ்வொரு தனிமனிதனின் பண்புகளில்தான் அடங்கியிருக்கிறது.

இதுவே 47 நாட்கள் கூறும் message என்று சொல்லலாம்.

"You cannot legislate for virtue" என்று Cardinal Gibbons சொன்னார்.

குற்றவியல் அடிப்படையிலான செயல்களுக்கு மட்டுமே சட்டம் இயற்ற முடியுமே தவிர, நற்பண்புகளுக்கும் குணநலன்களுக்கும் சட்டங்கள் இயற்றப்படுவதில்லை.

பாரிஸில் முதன் முறையாகப் படமெடுத்தவன் நான்தான் என்று எனக்கு நானே 'மேதை' பட்டத்தைக் கொடுத்துக் கொண்ட நான், இந்தப் படம் வெளிவருவதற்கு முன்பே பாரிஸில் எடுத்த இன்னொரு தமிழ்ப் படம் வெளியாகி விட்டிருக்கிறது என்கிற உண்மையைப் பின்னால் உணர்ந்தேன். ஒரு சின்ன அதிர்ச்சி!

The second part of the quote does not apply to me.

(தொடரும்)



"என்ன ஆபீஸில் உள்ளவர்கள் எல்லாம் ஆபீஸ் முடிந்தவுடன் நம்ம டைப்பிஸ்ட் இராமசாமி வீட்ட போறாங்க?"

"வேற! ஒண்ணுமில்லை! கனவுகளுக்கு பலன் சொல்வதில் அவர் எக்ஸ்பர்ட்டாம், அதுதான்!"

— கோவி. இராஜேந்திரன்

# ../நினைத்ததை நிச்சயமாக அடைய/..
# ''மனோசக்தி - பயிற்சி''
(தபால்-வழி போதனா முறை)

''மனிதனால் செய்ய முடியாத காரியம் உலகில் ஏதுமில்லை'' - இது சாஸ்திர தத்துவம். வேதங்களின் பேருரை, அன்றைய மாமுனிகள் - அனைத்தும் அறிந்த ரிஷிமார்கள் அனைவரும் ஒன்று குவிந்து சேர்த்து வைத்த பொக்கிஷம்; புனித பயிற்சியின் புதையல் - புன்னகை செய்துவரும் ''மனோ-சக்தி''க்கு - பூங்குழல் ஊதுகின்ற வரவேற்பு. எதையும் சாதிக்கும் இதயத்தின் திறனை எடுத்து ஆளும் பயிற்சி. எவ்வயது இனத்தாரும் கற்றுக் கொள்ளும் எளிய வழிகள். மனத்தை அடக்கி மலையையும் புரட்டலாம் என்ற வரலாறுக்குப் புதிய அத்தியாய ஆரம்பம், இன்றைய நாகரீகத்திலும் இடைபுகுந்து விளையாடும் இந்த சக்தி மறைமுகமாகக் கூத்தாடுகின்றது. தெரிந்தெடுத்து அதில் பயிற்சி ஏற்றித் தேர்ந்துவிட்டால், முடியாத காரியம் கிடையாது. கோடீஸ்வரராகலாம். கொடிய நோயை விரட்டலாம். கொல்லவரும் எதிரியைக் குறுக்கிட்டு நிறுத்தலாம்; இத்தகைய இமாலய சக்தி நம்முள் மறைந்து கிடக்கின்ற உண்மையை அறிகின்ற வாய்ப்பு - அனைத்தையும் அடைகின்ற ஆற்றல் பெற்றிட இப்பயிற்சியைப் பற்றிடுங்கள். இன்றைய சூழ்நிலையில் எட்டி உதைக்கின்ற ஏழ்மையை விரட்ட, இல்லாமையைத் துரத்த, இதயக் குமுறல்களைத் துடைக்க, இந்தப் பயிற்சி பூரணமாய்த் துணை நிற்கும். கற்றிட வாருங்கள்; அன்றைய அறிஞர்கள் ஆக்கி வைத்த ரகசியம் - மறைத்து வைத்த புதையல்; எடுத்தெடுத்து வைக்கின்றோம்; எதையும் சாதிக்கும் திறம் பெறுங்கள்; இகமதில் துயரமேதுமின்றி இளவரசனாகிவிடுங்கள். கற்றவுடனேயே காரிய பலிதங்கள்; கடின காரியத்தையும் - கனிவான வெற்றி கொள்ளச் செய்கின்ற பயிற்சிகள் - கோடி கோடியாய்ச் செல்வமதை சேர்த்திடும் பயிற்சிகள் - சிறப்பான தத்துவங்கள். அறிந்திட வந்திடுங்கள் - வளம் பெறுங்கள். இது வெறும் வார்த்தைக்குச் சொல்லவில்லை. பேருண்மை.''

பயிற்சியில் சேரும் முறை - செலுத்தும் கட்டணம்தனையறிய 2.5.1995 ஆம் தேதிக்குள் தெளிவான முகவரியுடன் எழுதுங்கள். பூரண விவரப் படிவம் அனுப்பி வைக்கின்றோம்.




பிரபல ஜோதிடர் : ஜோதிட ஆசிரியர்,

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி,**

இராஜயோகப் பயிற்சியாளர்.

பிளாட் எண் : 204, அண்ணாநகர்,

மதுரை - 625 020.

தொலைபேசி : 43412; 46634.

● ஜெ. கண்ணன், சென்னை - 101.

*? பீகாரில் காந்தி உருவம் பதித்த ஐநூறு ரூபாய் நோட்டைக் காட்டி வோட்டு கேட்டுள்ளனர். இதுதான் காந்திய வழியா?*

! சேஷன் சொன்னதுதானே? அவர் பல சந்தர்ப்பங்களில் கற்பனைகளைக் கூட உண்மைபோல் பேசுகிறார் என்பதை சமீபத்தில் அவர் ஜெயின் கமிஷன் முன் கூறிய சாட்சியம் மெய்ப்பிக்கிறதே!

● இரா. பார்த்திபன், சேத்துப்பட்டு.

*? சமீபத்தில் தங்களை வியப்பில் ஆழ்த்திய சம்பவம்?*

! 'ராஜீவின் கொலைக்கு அயல்நாட்டு உளவுப் படைகள் காரணம்' என்று தமது வாழ்க்கை வரலாற்று நூலில் எழுதப்பட்டிருப்பது, 'வெறும் ஊகமே அன்றி வேறில்லை' என்று சேஷன் ஜெயின் கமிஷன் முன் சாட்சியமளித்திருப்பதுதான். அதே நேரத்தில் தமது வாழ்க்கை வரலாறு நூல், தமது முழு ஒப்புதலுடனும் ஒத்துழைப்புடனும்தான் எழுதப்பட்டது என்கிறார். ஊகங்களெல்லாம் உண்மை போல் எழுதப்படும் அளவுக்கு சேஷன் பொறுப்பற்றவராக விளங்குவது மிகுந்த வியப்பு அளிப்பதுதான்.



• நொண்டிச் சமாதானம்

# ஜெ. ஆட்சி பொற்கால ஆட்சியா?



• "அதிர்ஷ்ட....

● என். சண்முகம், திருவண்ணாமலை.

*? விடுதலைப் புலிகள் தப்பிச் செல்வது தொடர்கதையாகி வருவது பற்றி...*

! "போலீஸை நவீனப்படுத்த நூறு கோடி கேட்டேன்; மத்திய அரசு தரவில்லை; அதனால்தான் புலிகள் தப்புகின்றனர்" என்று முதல்வர் நொண்டிச் சமாதானம் கூறுவதும் வாடிக்கையாகி வருகிறது.

● காமாட்சி சத்தியநாராயணன், வேலூர்.

*? ஜீ.சன். டீவி நிறுவனத்திலிருந்து 'சோ' விலகியிருப்பது பற்றி...?*

! எதிர்பார்த்ததுதான். சுதந்திரமாக இயங்க அனுமதிக்கப்படுவோம் என்று அவர் நம்பியதுதான் ஆச்சர்யம். போட்ட முதலைத் திரும்ப எடுப்பதில் குறியாயிருப்பவர்கள், பிரச்னைகளில் சிக்கிக் கொள்ள விரும்ப மாட்டார்கள். சோவுக்கு துக்ளக்கும், துக்ளக்குக்கு சோவும்தான் சரி.

● முத்துசாமி, நாரேந்தல்.

*? கண்துடைப்பு என்று எதைச் சொல்லலாம் சாரே?*

! பட்ஜெட்டில் காட்டப்படும் சில சலுகைகளை!

● சி. சாந்து உஸ்மானி, சென்னை - 4.

*? "என்னைக் கடவுளாக சித்திரித்து கட்அவுட் வைப்பதையோ போஸ்டர் ஒட்டுவதையோ நான் ஒருபோதும் விரும்பியதில்லை" என்று முதல்வர் கூறியுள்ளாரே?*

! 'தடுப்பதும் இல்லை' என்று கூறாமல் விட்டிருக்கிறாரே, அந்த சாமர்த்தியத்தைக் கவனியுங்கள்!

● எஸ். மதியழகன், தூத்துக்குடி.

*? ஜெயலலிதாவின் ஆட்சி பொற்கால ஆட்சியா?*

! நகைக்கடை நடமாடும் போது பொற்காலம்தானே!

● என். அன்பன் சக்தி, காளையார்கோயில்.

*? மராட்டியத்தில் ஆட்சி அமைத்துள்ள சிவசேனை பற்றி...?*

! இதற்குள்ளேயே பிரச்னை எழுந்தாயிற்று. பம்பாயில் வந்து குடியேறியுள்ள பங்களாதேசிகளையும் பாகிஸ்தானியரையும் இனம் கண்டு திருப்பி அனுப்பப் போகிறார்களாம். பல்லாயிரக்கணக்கானோரை வயிற்றிலடிக்கும் இந்தச் செயலையாவது கஷ்டப்பட்டு பொறுத்துக் கொள்ளலாம்; பம்பாய்க்குள் நுழைய பெர்மிட் வேண்டும் என்ற கொடுமையை யாராலும் சகிக்க முடியாது. சிவசேனாவின் இந்தத் திட்டத்தை பி.ஜே.பி. ஏற்கெனவே எதிர்த்து விட்டது. ஆக, 'இந்த சந்தர்ப்பக் கூட்டணி தாக்குப்பிடிக்குமா?' என்ற சந்தேகமும் எழுந்து விட்டது.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? தமிழர் பண்பாடு வளர்ந்துள்ளதா?*

! ஆமாமாம்! கட்அவுட் அளவுக்கு!

● எஸ். அனந்தகுமார், பேச்சிப்பாறை.

*? ஏன் இன்னும் ஒரு விவசாயியால் முன்னேற முடியவில்லை?*

! யார் சொன்னது? ஹைதராபாத்தில் உள்ள தமது திராட்சைத் தோட்டத்திலிருந்துதான் கோடி கோடியாகத் தமக்கு வருமானம் வருகிறது என்று முதல்வர் ஜெ. சொல்லும் போது, உமது கூற்றை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்?

● பி. ராஜன், தாராபுரம்.

*? 'தமிழுக்கு மட்டுமே நான் அடிமை'*

என்று காளிமுத்து கூறியுள்ளது பற்றி...?

! ரொம்ப வசதி, எந்தக் கட்சிக்கு மாறினாலும் அந்தக் கட்சி தலைவரை 'தமிழ் அன்னை' என்றோ, 'தமிழ் அப்பன்' என்றோ, வர்ணித்து வணங்க!

● **பி. ஆர். பாலசந்தர், திருநெல்வேலி.**

*? அரசியல்வாதிகளின் பொழுதுபோக்கு என்ன?*

! பணம் பண்ணுவது; பண்ணிய பணத்தை எண்ணுவது!

● **எம். ஜெயமுருகன், ரிஷிவந்தியம்.**

*? 'சந்தனக் கடத்தல் வீரப்பனுக்கு இப்போது ஆள் பலமும் இல்லை; ஆயுத பலமும் இல்லை' என்று ஜெ. கூறியுள்ளது பற்றி...?*

! அதிர்ஷ்ட பலம் உள்ளதாக தேவாரம் கூறியிருப்பதைக் கவனிக்கவில்லை போலும்!

● **எல். கோபாலகிருஷ்ணன்,**
**அரக்கோணம்.** ❑

*? பாகிஸ்தானைப் பயங்கரவாத நாடாக அறிவிக்க வேண்டும் என்ற தீர்மானம் அமெரிக்கப் பாராளுமன்றத்தில் வரப் போகிறதாமே?*

! காஷ்மீரில் பாக். பயங்கரவாதிகளின் ஊடுருவல் நடந்தபோதெல்லாம் கண்டும் காணாமலும் இருந்த அமெரிக்காவுக்கு, தனது தூதரகத்தைச் சேர்ந்த இருவர் கராச்சியில் காரில் வைத்தே சுட்டுக் கொல்லப் பட்டதும் ஏற்பட்ட ஞானோதயம்!

● **மு. இரவிச்சந்திரன், சேலம்.**

*? சமீபத்தில் தங்களை பதறச் செய்த சம்பவம்?*

! டோக்கியோ பாதாள ரயில்வேயில் விஷ வாயுவைப் பரப்பி, எட்டுப் பேரைக் கொன்றும் 7.5 பேரைக் குற்றுயிரும் கொலையுயிருமாக்கியும் வதைத்த பயங்கரவாதிகளின் செயல். பயங்கரவாதம், அதிபயங்கரவாதமாக மாறி வருவதை உணர்த்தும் நிகழ்ச்சி. அரசியல் ஆதாய நோக்கின்றி, பயங்கரவாதம் எங்கிருந்தாலும் அதை எல்லா அரசுகளும் ஒட்டுமொத்தமாக எதிர்க்க வேண்டும் என்பதை உணர்த்தும் சம்பவம். ஜப்பானிய அரசு இயந்திரத்தின் அபார செயல்பாடுதான் பல்லாயிரக்கணக்கான மக்கள் பலியாவதைத் தடுத்து விட்டிருக்கிறது என்பதையறிய, அவர்களின் கடமையுணர்வு நம் கரங்குவிப்பைப் பெறுகிறது.







* தமிழுக்கு அடிமை!



❑ **ரூ 25 பரிசு பெறுபவர் :**
**எல். கோபால கிருஷ்ணன்.**
**13, காந்தி ரோடு,**
**அரக்கோணம் - 631 001.**

* எதிர்பார்த்த விலகல்

# சட்ட அமைச்சர் அறிக்கை விடப் போகிறார்!

## வட்ட மேஜை

◆ ''புலிகள் தப்பியதை விடவும் பேரவமானம்'' தலையங்கம் தங்கம். அதிகாரிகளே கருங்காலிகளாக மாறி தேச விரோத சக்திகளோடு கை குலுக்கிக் கொண்டுள்ளதை அரசுக்கு விழிப்பு வரும்படி சுட்டிக் காட்டித் தலையங்கம் தீட்டி இருந்தீர்கள்.

செங்கணான் கொல்லை,

செ.க. மலரடியான்.

'மகா மகத்தில் ஏற்பட்ட வமானத்தை விடவா அம்மாவுக்குப் புலிகள் தப்பிய விஷயத்தில் அவமானம் ஏற்படபோகிறது?' என்று உங்கள் தலையங்கத்தைப் பார்த்த நம் சட்ட அமைச்சர் கே.ஏ.கே. அறிக்கை விடா மல் இருந்தால் சரி.

பவித்திரமாணிக்கம்,

தராகப்ரியன்.

◆ ''அடுத்த பிரதமரை நியமிக்கப்போவது ஜெ. யாமே?'' என்ற வாசகரின் கேள்விக் குத் தராக அளித்த பதில்தான் இவ்வாண்டின் தலைசிறந்த ஜோக்.

விசலூர் - 1,

ஜி.ஜி. கிருஷ்ணன்.

◆ பன்னீர்ஜி எழுதிய கவிதை ஒரு பண முதலை யின் அல்லது அரசியல் வாதி யின் ஒப்புதல் வாக்கு மூல மாய்ச் சுட்டது!

மதுரை - 9,

இரா. கல்யாணசுந்தரம்.

◆ ஆடி அடங்கும் வாழ்க்கையின் முடிவில் ஆறடி நிலமே சொந்தமென ஆகும் போது, ஆயிரக்கணக்கான ஏக்கர் இடம் வாங்கி மேலும் வாங்க ஆவலுறும் நபரின் சங்கதி, புல்லரிக்கச் செய்து விட்டது....

மதுரை - 16,

எல்.எம். அபிதாட்சயா.



◆ ''என்ன சார்... இப்படி தலைதெறிக்க ஓடி வர்றீங்க... உங்க பிட்னியை யாராவது திருடிட்டாங்களா என்ன?''

''அட, போய்யா... அதுவா வது பரவாயில்லையே! என் னோட வயலையே எனக்குத் தெரியாம யாரோ வித்திட் டாங்க!''

சென்னை - 30,

புளியரை கணேசன்.

◆ ''மயக்கும் மல்டி மீடியா'' கவர் ஸ்டோரியை ஒரே மூச்சில் தொடர்ந்து படித்து முடித்தேன். வருங்கால கம்ப்யூட்டர் யுகத்தின் படப்பிடிப்பைக் கண்டு மெய் மறந்து போனேன். மொத்தத்தில் எங்களை இப்பொழுதே 21 - ஆம் நூற்றாண்டுக்கு அழைத்துச் சென்று விட்டீர்கள்!

சீர்காழி, ஆர். ராஜதுரை.

◆ ''மயக்கும் மல்டி மீடியா'' கட்டுரை படித்தேன். எந்த அளவுக்கு இந்தக் கம்ப்யூட் டர், வாழ்வில் - அன்றாட அலுவல்களில் இன்னும் அதி அற்புதமான உத்திகளோடு கலந்து, என்னவெல்லாம் சாதனைகள் நிகழ்த்தப் போகிறதோ என்பதைப் 'பேச்சு வழக்கு' உதாரணங்களுடன் விளக்கி, ஏதோ வேறு உலகத் திற்குள் கூட்டிச் சென்ற பிரமை இன்னும் தீரவில்லை!

சென்னை - 49,

மயிலை கோபி.

◆ 'உள்ளும் புறமும்' கதை யதார்த்தமானது. என்னதான் கலாவும் ஜெயந்தியும், உயிருக் குயிராக இருந்தாலும் 'தாயும், பிள்ளையுமாய்'ப் பழகினா லும் 'வாயும் வயிறும் வேறு' என்பதைக் கலா என்ற பாத் திரத்தின் வாயிலாக உணர்த்தி விட்டார், கதாசிரியர்.

பட்டுக்கோட்டை,

இ. ராதாகிருஷ்ணன்.

◆ 'நேற்று மட்டும் நான் சிரித்தேன்', சிறுகதை படித் தேன். ஒரு பெண் விதவை எனத் தெரிந்தும் ஒருவன் காதலிக்க முன் வருவது அபூர்வம். காதலிக்க முன் வந்தவனை அந்த விதவைப் பெண் நினைப்பதும், மனதிற்குள் நிறுத்தி வைத்து அவனை ரசிப்பதும் காதலுக் கான முடிவைத் தோழியிடம் கேட்டுக் குழம்புவதும் எந்த சராசரி பெண்ணுக்குள்ளும் ஏற்படும் உணர்வுகள்தான். என்றாலும் ஆசிரியர் அதைப் பதியும்படி சொல்லி இருப்பது அருமை.

இலால்குடி,

ஆங்கரை பைரவி.

◆ சுப்ரமணியன் ரவிச்சந்திரன் எழுதிய ''வாட் ஈஸ் யுவர் நேம்'' கதை நடுத்தர வர்க்கத் தினரின் யதார்த்தத்தையும் காற்றைப் போல் நிரவி நிற்கும் நேர்மைக் குறைவையும் அழகாகச் சித்திரித்திருந்தது.

மதுரை - 6, கே. விஸ்வநாதன்.

பாதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பாதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.






பாரதி ஜெம்ஸ் & ஜுவல்ஸ்

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka